சென்றரும்பரமானந்தவாரிதியிற் றிளைத்திடுஞ்சுக
னென்பவனே. (௪௨)

செந்நெல்வைத்தசருக்கம்
முற்றிற்று.
ஆகச்செய்யுள்-௪௪௦.

---

## தாருகன்வதைச்சருக்கம்.

:o:

சுருக்கமிலறிவுடைச்சூதமாதவன்
றிருக்கிளர்கூவமாநகர்ச்சிறப்பெலா
முரைக்கவுமகிழ்ந்துகையுச்சிகூப்பிமா
விருக்குநன்முனிவரரியம்பன்மேயினர். (௧)

முன்னரீதருக்கமாதெனமொழிந்தவ
டன்னதுதோற்றமென்றனிப்பொற்கூவமா
நன்னகரிடைநடமாடவந்தவா
றென்னகொலியம்பெனவிசைத்தன்மேயினன். (௨)

போரறங்க[illegible]லைபெயரக்காமனோ
யாருதலெனநிகழிலம்யானையுங்
கூரிடர்மூழ்குபுகுலையமேலைநாட்
டாருகனெனவொருதகுவன்றோன்றினன். (௩)

சேண்டொடுதனதுடற்சிந்துசெம்புனற்
காண்டுளிமுழுதுந்தற்கடுத்தெழுந்திட
வாண்டகையோர்களாலழிவுறாதும
மாண்டகுதவத்தினன்வரம்படைத்துளான். (௪)

எண்டிசையனையனையெழுபிலத்தினில்
விண்டலமிசையுறுவேந்தர்தங்களை
மண்டுதன்சேனைகாவலர்களால்வயங்
கொண்டனுதினமுங்குற்றேவல்கொள்பவன். (௫)

தறுகண்வெஞ்சினக்கொடுந்தாருகன்றிசை
யுறுகரிதினந்தொறுமொரோவொன்றாகவே
குறுகியனுதாரம்கொணர்வித்தேறியோர்
மறுகெனவுலகெலாம்பவனிவந்துளான். (௬)

ஒள்ளொளியிரவிதேர்க்கிள்ளையொத்தவேழ்
கிள்ளைகண்மீதுமொண்கிண்கிணிச்சாண்
பிள்ளையேழ்தினத்தினுமேற்றிப்பொழின்
ஞெள்ளலினுலாவருவித்துநீக்குவான். (௭)

கொம்மெனப்புறவடிகொண்டொரொற்றிறன்
னைம்மலிதிரைக்கடல்வறப்பவெம்புவான்
செம்மகமேருவினோடுசிற்சிலம்
பம்மனையெனவெடுத்தாடுமாற்றலான். (௮)

வாணிதிரந்துதாமரைதன்வாவியிற்
பாணிகழ்வளையொடுபதுமமாகவே
யாணிரைதனிற்பசுவாகத்தேனுவைங்
காநகர்மலர்ப்பொழிலாகக்கண்டுளான். (௯)

வித்தகவிடையினோன்வில்லிற்பொன்கவர்ந்
தத்தனுவளைவுறவசைத்தநாரியின்

மெத்தொளிமணிகொளாவியப்பவாக்கிய
புத்தணியவயவம்புனைந்தமாட்சியான். (௧௦)

மணங்கமழ்குழலரமகளிர்ப்பற்றிவந்
திணங்குறுதருவியர்க்கேவல்செய்வியா
வுணங்குறுசிறைபுரிந்துடன்றணக்கியே
யணங்கியெனும்பெயரவனிட்டானரோ. (௧௧)

மேயதன்றிகழவைவிளங்கராவிறை
மாயிருந்தலைகளேவனைந்ததும்பமா
மீயிலங்கொளிமணியிருள்விழுங்குறு
மாயிருஞ்சுடர்களாயமரவைத்துளான். (௧௨)

ஒல்லையிற்பொழுதுணர்ந்தோலக்கத்துறு
மெல்லையிற்புகுந்திடாதிருந்ததேவரைக்
† கொல்லுலைக்கனல்விழிக்கொடியதூதரான்
வல்லியிட்டருஞ்சிறைப்படுத்தவன்மையான். (௧௩)

கனவினுமவன்றனைக்காணினிந்திரன்
மனநடுநடுங்கிவாய்குழறிவல்லையி
னனவினையடைந்துபின்னடுங்குநெஞ்சகத்
தினைவுறலொருபகலெலாமொழிந்திடான். (௧௪)

ஒருங்குலகங்களினுயிர்களுக்கெலாம்
வருங்கொடுநோயெனவருமவன்றனு
லருங்கடவுளாருச்சனையமங்கள்வான்
றருங்கலைநெறிமகந்தவமகன்றதே. (௧௫)

† கொல் என்பது - கொல்லன் என்னும் பொருளில்வந்தது.

அக்கொடுந்தயித்தியனாணையிற்படா, வுக்குநெ
ஞ்சிடர்ப்படுங்காலத்தோர்பகன், மிக்கவிண்ணவா
ரிவிரிஞ்சனிந்திரன், றொக்கொருங்கொருப்படைநுய
ரொடீண்டினார். (௧௬)

தங்கள்வெந்துயருமத்தருவனாவியு
மங்கொருங்கழியுநாளடுத்ததாதலாற்
சங்கரன்றனையினிச்சரணென்றெய்திடின்
மங்குநந்துயரெனமனந்துணிந்தனர். (௧௭)

துணிந்தவர்கயிலையைத்தொழுதங்கெய்துபு
துணிந்தமெய்ம்மனனுடைத்தவத்தர்சென்னிமீ
தணிந்திடுந்திதாளரணடைந்துநேர்
பணிந்தனரினையனபகர்தன்மேயினார். (௧௮)

தடுத்தசெங்கோலுடைத்தாருகன்றனு
லடுத்தவெந்துயருரைத்தகற்றவந்தனம்
படைத்தெமையளித்திடும்பராபரன்முனம்
விடுத்தருளையநீயென்றுவேண்டினார். (௧௯)

தன்னைநேர்கின்றவன்சைவதேசிக
னென்னையாளுடையநந்தீசன்சென்மென
மின்னுலாஞ்சடையினேன்வீற்றிருந்துழித்
துன்னுவானவரெலாந்தொழுதுபோயினார். (௨௦)

வருணமாமணியொளிர்மண்டபத்திடைத்
தருணவாரணப்பகைத்தவிசின்மீமிசை

யருணகோடிகடிரண்டமர்ந்ததென்னவாழ்
கருணைவாரிதிதனைக்கண்டிறைஞ்சினார். (௨௧)

விழிப்புனறுளிப்பமெய்விதிர்ப்பவாளெரி, புழி
ப்படுமரக்கினெஞ்சுருகிவெந்துயர்ச், சுழிப்படுமெ
னக்கருள்சுரக்குமீசனை, மொழிப்பயன்பெறத்திருமு
ன்னின்றேத்துவார். (௨௨)

வேறு.

வானுதிகளாய்திகழ்வாய்சரணமறைமாமுடியின்
பொருளேசரண, மூனுருயிரேசரணஞ்சரணமுண
ர்வுக்குணர்வேசரணஞ்சரணந், தேனார்மொழிபங்
கினனேசரணஞ்சிவசங்கரனேசரணஞ்சரண, மா
னுவமுதேசரணஞ் சரணமருளாகரனேசரணஞ்சர
ணம். (௨௩)

மருவேமலரேசரணஞ்சரணமணியேயொளியே
சரணஞ்சரணந், திருவேபொருளே சரணஞ்சரணந்
தேனேயமுதேசரணஞ்சரண, மிரவேபகலேசரண
ஞ்சரண மெமையாளுடையாய்சரணஞ்சரண, மரு
வேயுருவேசரணஞ்சரணமருளாகரனேசரணஞ்சர
ணம். (௨௪)

வேறு.

என்றிவைபுகன்றுபோற்றியிணைமலர்க்கரங்குவி
த்து, நின்றவர்தமைமென்கொன்றைநெடுஞ்சடைக்
கடவுணோக்கிப், பொன்றிகழ்மணாதிப்பட்டபோன்

முகம்புலர்ந்தவுங்கட்,கொன்றிநெஞ்சகன்றிடாதது யரமேதுரைத்தியென்றான். (உரு)

பெருந்தகையியம்பமாயோன்பெயர்வின்றிப்பொருள்கடோறு, மிருந்துடனியக்குகின்றவெந்தைநீயெங்கணெஞ்சி, னருந்துயர்தியாய்போலவினவியதடியேமுய்யப், பொருந்தியகருணையென்றுபோற்றிநின்றுரைப்பதானான். (உசு)

தாருகனென்னவெய்யதயித்தியனொருவன்றோன்றிப், பாரிடைமுன்னைவேதம் பகர்மகமறத்தின்பேதஞ், சிரியதவங்கடானஞ்சிதைந்தனதுன்பமெய்தி, யாருயிர்தரித்திருந்தா ரமரராகையினால்விண்ணோர். (உஎ)

சற்றுமுட்கருணைகொள்ளாத் தாருகனிழைத்ததீமை, யிற்றெனக்கிளக்கவெம்மான்முடிவுறாதெம்பிரானே, மற்றினிப்புகல்வதென்கொல்வலிகெழுமவன்றனக்குன்,சிற்றடிக்கேவல்செய்யுஞ்செயலெனத்தினமுஞ்செய்தோம். (உஅ)

அந்தவேலவுணன்றீமையாம்றரிதெங்கட்குந்தன், கந்தவாரிசப்பொற்றாளே காப்பெனவபயம்புக்கே, மெந்தைநீயெம்மைத்துன்பக்கடலினின்றெடுத்தாட்கோடி, தந்தையேயன்றிவேறார்தனையர்தமின்னறீர்ப்பார். (உகூ)

அச்சுதனெனுமென்னைமைத்தமாவொன்சுரர்களுமத்
திச்சகமறியநின்றமுதலெழுத்திகவாதொன்ற

* நச்சினைமிடற்றடக்குநாதவன்னஞ்சிற்றீயன், கைச்செமைத்தினமொறுக்குங்கடுந்திறற்றாருகன்றன்

எம்முயிரொழியாதென்றுமிருந்திடர்ப்படவருத்து, மம்மறவனையட்டாட்கொள்ளஃதின்றேலடியேமெல்லா, மிம்மெனவிமைப்பின்மாளவெமைமுனம்புரக்கவைத்த, வெம்மைகொண்மணிமிடற்றின் விடத்தைவிட்டிடுதியையா. (௩௧)

என்றராவணையிற்றுஞ்சுமெழிலரியியம்பக்கேட்டுப், பின்றிகழ்சடிலக்கற்றைப்பெருந்தகையருண்மீதூர, வன்றிறலவுணன்றன்னை மாய்த்துவானவர்கணெஞ்சந், துன்றுறுதுயரனைத்துந் தொலைத்திடவுளங்கொண்டானால். (௩௨)

வன்மனத்தவுணர்கோமான்வரத்தொடுவலியுமுள்கிப், பொன்மலைச்சிலைகுனித்துப்புரமெரிபடுத்தவெம்மான், சின்மயக்கிரியபந்த தேவிதன்வதனநோக்கி, மென்மலர்க்கரந்தனது மிடற்றினுலத்துவைத்தான். (௩௩)

---

* நச்சினைமிடற்றடக்காவழி, திருமாலும் அயன்முதலிய தேவரும் இறந்தலையுடையாராக; அச்சுதன் அமரனென்றும் அவர்நாமங்கள், அகரத்தையிழந்து முறையே சுதனெனநின்று அழிவை யுடையவனெனவும், மரனெனநின்று மரித்தலையுடையவனெனவும், பொருள்பட்டு நிற்குமாகலின், முதலெழுத்திலவாதொன்ற நச்சினைமிடற்றடக்குநாதன் என்று விதந்தார்.

வைத்தவக்கணத்தினெண்டோண்மலைபிணைத்
தன்னகொங்கை,மெய்த்தழம்கொழுந்துபோலுமெ
ன்சிகைகுழைதாவால, மொத்தகட்பேழ்வாய்வாரி
யுண்முகில்புரையுமேனிக், கைத்தலக்கழுமுட்டுங்
கக்காளிவந்துதித்தாண்மன்னோ. (௩௪)

அண்டகோளகையிற்றாக்கியணிமுடிவளையமிக்
க, வெண்டிசாமுகத்தினெல்லை யெண்புயமளப்பக்க
ண்கண், மண்டுதீச்சொரியச்சூலம்வண்கையிற்றிரி
யவூழிக்,கொண்டலாயிரமுழங்குங்கொள்கையினதி
ர்த்தெழுந்தாள். (௩௫)

செந்தழறனக்குவெம்மையியல்பெனச்சீற்றமெ
ன்று, மந்தமில்குணமாயுள்ளாளடைந்தவர்க்கருளு
ஞ்செய்யா, ளிந்தவண்டங்கள்கோடியியற்றிடவெ
ண்ணுநெஞ்சா, ளுந்துமாற்றலாலெவ்வுலகினுமு
வமையில்லாள். (௩௬)

மைந்நகநடுவட்சூழ்ந்தமாலையின்செக்கர்போல
த், தன்னரைவிரித்துடுத்ததயங்குசெந்துகிலின்பொ
ற்பாள், கொன்னுனைவடிகன்சூலக்கொடும்படைநி
கர்த்தசூல, மன்னியமலர்க்கரத்தாண்மணிச்சிலம்ப
ரற்றுந்தாளாள். (௩௭)

ஞாலத்தினுயிர்களெல்லாநடுங்குறக்கரத்திற்
கொண்ட, சூலத்தினுதியிற்குத்திச்சோரியுண்டிடக்
குறிப்பாள், வேலைத்திண்டிரையிற்றோன்றி யுலகெ

லாம்விழுங்கவந்த, வாலத்தினுதித்தாளென்றாலஃ
தவட்கடுத்ததன்றே. (௩௮)

உன்னருமுதிர்சூன்மேகமொத்ததிர்த்தெழுந்த
செங்கட், கன்னியையுமைகண்டேங்கிக்கைவிரனெ
ரித்துச்சென்று, தன்னிகாமலன்மார்பிற்பண்டுமுத
ன்றழும்பிற், பொன்னவிர்சுணங்குபூத்தமுலைபடப்
புல்லிக்கொண்டாள். (௩௯)

அன்னவளெழுதல்கண்டவச்சுதனெம்பிரான்
முன், பின்னுரைசெய்தவாறேபெருவிடத்தினைமா
தாக்கி, யிங்கிலைபெமையவதைப்பவிடுத்தனனென்ன
மாழ்கி[illegible] தன்னகமருண்டுநின்றான்சதுர்முகனுட
ல்கம்பி[illegible]ான். (௪0)

இ[illegible]ன்மனந்தளர்ந்தாளெரியுடல்வெயர்த்தா
ன்செ[illegible], மந்தகனுவுலர்ந்தானிருதிமெய்யயர்ந்
தானேனையச், சிந்துவினிறைவெருண்டான்[illegible]மீரண
ன்றிகைத்தான்மூர்ச்சித், துந்துமுருபேரன்வீழ்ந்
தானுயங்கியீசானனின்றான். (௪௧)

ஏனையவும்பரெல்லாமெழுந்தமாகாளிகோர [லைக்
மேனியையெதிர்கண்டேங்கிவிழிபுதைத்தனரவ்வே
கூனல்வெண்பிறைமிலைந்தகுரிசிலோடிலமீன்ற
ஞானநாயகியைத்தாழ்ந்துநவிலுமச்சூலிமாதோ.

வேறு.

பரமவென்னைப்படைத்தவநானிவண்
புரியுமேவல்புகன்றருளன்னதுன்

னருளினும்றுவனென்னவான்சூர்
வெருவுநெஞ்சமகிழவிளம்புவான். (௬௩)

தேவரொன்றுஞ்செயத்தகவல்லரும்
றேவல்செய்யவிடர்புரிதாருக
னாவிகொண்டவர்க்காக்கமுதவுவான்
பாவைநின்னைப்படைத்தனமென்றரோ. (௬௪)

ஆரிபட்டகடுந்தொழிற்றாருகன்
சோரிபட்டதுகளுமனையவன்
மாரிபட்டவடிவுகொண்டுற்றெழு
மூரிபட்டமுகின்முலைக்காளியே. (௬௫)

சூலத்தாற்குத்துபுசொரிசோரிக
பாலத்தேற்றுப்பருகியவென்டு
நீலத்தாக்கையைநீயேவிழுங்குதி
யாலத்தோடுதித்தாயென்றறைந்தனன். (௬௬)

குனித்தவார்சிலைக்குன்றினன்றம்மனை
மினைத்தவாறுமிகழ்ந்தினனுதலாம்
கனத்தவார்முலைக்காளிமகிழ்வுறீஇ
நுனித்தோர்மாற்றநுவலுதன்மேயினள். (௬௭)

அண்டர்நாதவளியன்றனக்குநீ
புண்டலேபணியாகவுதவினா
தொண்டராகிற்சூழ்ந்திடுவோர்கமுட்
கொண்டினின்னருளென்னிடைக்கூர்ந்ததே. (௬௮)

ஐயநீயென்பணித்தனையன்னதே
செய்யநான்கடவேனெனச்செப்பியே
கையின்மான்மழுக்கொண்டகடவுடன்
ஐயதாளைத்தொழுதுநின்றுளரோ. (௪௯)

அன்னகாலையனீகமதாகவே
கன்னியோகினிவெள்ளங்கணிப்பில
மன்னுகாளிவடிவினுதித்தெழ
வென்னையாளுடையீசனினைந்தனன். (௫0)

அக்குமாரியனையவடிவொடு
கைக்கபாலங்கழுமுட்டிகழ்தர
மிக்கயோகினிவெள்ளமசனியே
ரொக்கவார்த்தவண்மெய்ந்நின்றுதித்ததே. (௫௧)

எந்தைசென்னியிளம்பிறையொத்தபல்
கந்தரத்திற்கடுவைநிகர்த்தமெய்
செந்தளிர்க்கைச்செழுங்கனல்போன்றகண்
ணுந்துமுத்தலையோகினிகட்கரோ. (௫௨)

வேறு.

கண்ணுதம்பரமன்பினர்க்காளியைநோக்கி, யெ ண்ணிலித்திறல்யோகினிவெள்ளமோடேகிப், புண் ணியப்பகைத்தாருகனுவியைப்போக்கிப், பண்ணவர்க்கருள்செய்யெனவேவினன்பணித்து. (௫௩)

எம்பிரானையுமலைநாயகியையுமிறைஞ்சிக்
கும்பமாமுலைத்தையலண்யாமளைவிடைகொண்டு

செம்பொனுலயப்புறத்துவந்தடைந்தனள்செறிந்த
வும்பராங்கதுகண்டனர்மனப்பயமொழிந்தார். ( )

தேறினார்மனமெம்பிரான்றிருவருட்செயலைக்
கூறினார்மகிழ்ந்தொருவர்மேலொருவர்தாங்குப்புற்
றேறினார்கரங்கொட்டினார்பாடினாரிருசான்
மாறினார்சுழன்றாடினாரன்புடைவந்தார். (௫௫)

அந்தணாவெமதாருயிர்போக்கவென்றகிர்த்து
வந்தகாளத்திற்காளியைவருவித்திங்கவளை
யெந்தமாவிமைவிடப்பணித்தனையின்று
நுந்தமாருட்பெருமையாரறிபவர்நுவலின். (௫௬)

என்னவீசனதருடுதித்திறைஞ்சுபுவிடைகொண்
டன்னையாகியயாமளைபுடையின்வந்தடைந்து
மன்னும்வானவரனைவருந்தனித்தனிவணங்கித்
துன்னுமாமலர்மழையவண்முடியிசைச்சொரிந்தார்

சொரிந்தவிண்ணவர்தங்கள்கம்பியற்கொடுருல, மிருந்தகையுடையாமளைக்கேற்றதோரிரதம், விரைந்துநன்குறவாக்குவித்தளித்திதன்மீது, பொருந்திகண்ணலம்செருத்திடப்போதிதியென்று. (௫௭)

புகழ்ந்துவிம்பவவ்விரதத்தின்பொலிவினைநோக்கி
மகிழ்ந்துமற்றதைக்கடவவோர்யோகினிமாதைப்
பகர்ந்திருத்திவெண்டோளியாயிடையதிற்பாய்ந்தா
ணிகழ்ந்தநன்முனிவரர்சயசயவெனவிசைத்த. ( )

தலைவியாகியயாமளையிவரவத்தடந்தேர்
வலவிபாரிடைத்தூண்டினன்காற்றெனவலிதி
னிலவிழுவிலைப்படைகொடுயோகினிநேத்தஞ்
சுலவிவேலையினெண்மடங்கார்த்தனசூழ்ந்து. (௬0)

நிலத்தினேகினவானகத்தேகினநிமிர்பா
தலத்தினேகினமுகிலிடத்தேகினதட்டத
புலத்தினேகினகடலகத்தேகினபொருப்புக்
குலத்தினேகினகுமரிதன்பெண்படைகுழுமி. (௬௧)

துடியதிர்ந்தனபதலைகளதிர்ந்தனதுளைச்சங்
கிடியதிர்ந்தனகாகளமதிர்ந்தனவிரலை
வெடியதிர்ந்தனமுரசதிர்ந்தனபணிவேந்தின்
முடியதிர்ந்தனவதிர்ந்தனதரணியுமுழக்கால் (௬௨)

மிக்கயோகினிப்படைசெலப்பொடிவிசும்பிவர்த
லிக்குமேவியெம்காலொடுந்தொடத்தகாதெனவே
புக்குறூர்முடியிவர்ந்திமையவொனல்போக்கி
மக்கள்போம்புரிகிற்பனென்றேகுதன்மானும். ( )

கார்மறைத்தனதிசைகளைமறைத்தனகதிரின்
றேர்மறைத்தனகுலகிரிமறைத்தனதிரைமுந்
நீர்மறைத்தனவுடுக்கணமறைத்தனநெடுவா
னூர்மறைத்தனமறைத்தனவுலகெலாம்பூழி. (௬௪)

தொடுக்குமாலையங்குவிமுலைச்சூலிதாரணியை
யெடுக்குநாகமெய்நெளித்தலமாவதிர்த்தெழுந்து

நடக்கும்போகினிவெள்ளமோடமரர்நன்னதிமட்
டடுக்குமாமதிற்றிருகபுரத்தயலடைந்தாள். (௬௫)

வேறு.

ஒற்றரன்னதுணர்ந்தனரோடினார்.
கொற்றமன்னன்குருமணிப்பொற்றவி
சுற்றபேரவையுற்றுவணங்குபு
முற்றும்வெஞ்சினமூண்டெழக்கூறுவார். (௬௬)

ஐயரீவிண்ணவர்ப்பணிகோடலாற்
கையுலாம்படைக்காளியெனவொரு
தையல்யோகினித்தானைகளோடமர்
செய்பவிவ்வுழிச்சேர்ந்தனளென்றனர். (௬௭)

அந்தவொற்றரறைந்திடுமவ்வுரை
சந்தனப்புயத்தாருகன்சீற்றமா
முந்துமுட்கனன்மூண்டெழக்கூறிய
மந்திரத்தைநிகர்த்ததுவந்தரோ. (௬௮)

பன்னுமம்மொழிபாதிசெவிபுகு
முன்னந்தீச்சினமூண்டதவனகந்
துன்னும்புகைதுண்டத்தெழுந்தன
வன்னிவெம்பொறிவாட்கண்சிதறின. (௬௯)

மட்டில்வெஞ்சினவன்னியழிவினைச்
சுட்டதிவ்வளவிற்றொலைகின்றதோ;
கிட்டினோரையுங்கேளையுந்தன்னையு
மட்டிடுந்துணையும்மவியாததே. (௭௦)

இதழதுக்கியெயிறுகுமித்தன
னுதன்மிசைச்செலநூக்குபுருவியாய்
மதாரிக்கண்மலரவிழித்தனன்
முதிர்சினத்தினன்மீசைமுறுக்கினான். (எக)

பொன்றில்கற்பகப்புட்களொழுக்கர
மொன்றொடொன்றுறத்தாக்கியுருமுவீழ்
கின்றதென்னநகைத்தனன்கேட்டசொன்
னென்றுநன்றெனச்சீறிநவிலுவான். (எஉ)

அடியொன்றுலகியாவுமளந்தமா, னெடியன்று
றுமென்னேவலினின்றிடும், படியன்றாற்றுமென்
பாலமர்க்கென்றுபெண், கொடியொன்றெய்திலென்
கொற்றநன்றுகுமால். (எங)

இந்திராதிகளியாரையும்வென்றிடு
மந்தமேவருமாற்றலுண்டென்னினு
வந்துளாரொருமாதமர்க்கென்னுயிர்
சிந்தைதானுயிர்நீங்கினுநீங்குமோ. (எச)

புவனம்யாவினும்போர்த்தொழில்வந்துசெய்
பவரிலாமையிற்றோட்பயனின்றியே
கவலுநெஞ்சினன்காரிகையோடமர்
நவிலிலோர்பழிநண்ணினனாவனால், (எரு)

என்னைவெல்லவிங்கேந்திழைபெய்தலான்
பின்னைவெல்லவுரகமுமேவுமான்

மன்னைவெல்லமலையும்வரும்புலி
தன்னைவெல்லவுஞ்மகளுஞ்சாருமால். (எசு)

கண்ணன்வேதன்கடவுளரிந்திர
னண்ணன்மாமுனிவோர்களபயமோர்
பெண்ணின்பாற்புகும்பெற்றிமையாலவர்
நண்ணுமாண்மைமணிசிறந்திட்டதால். (எஎ)

வேறு.

இந்திரற்பிடித்தெடுத்தெற்றிவீழ்ப்பனோ
வந்தகற்பதைத்திடவடித்துக்கொல்வனோ
சந்திரற்கதிரொடுமெடுத்துத்தங்குழூம்
பந்தெனப்புடைப்பனோபடியிற்பாணியால். (எஅ)

கனலினைவிழுங்கியேழ்கடலுமுண்பனோ
சினமறவமரரைப்பதத்திற்றேய்ப்பனோ
முனிவரர்குலமெலாமுடிப்பனோவென
வினையனபலபகர்ந்தெரியிற்சீறினான். (எகூ)

சீறியதாருகத்தீயன்யாமனை
வீறியவெனைத்தொழுமேவினான்கொலோ
மாறமர்புரிந்திடவந்துளாள்கொலோ
கூறுதிரொற்றினீர்குறிப்பென்னென்றனன். (அ0)

என்றலுமொற்றர்களிறைஞ்சியையகேள்
வன்றிறல்யாமனைமறலிதன்னையும்
வென்றிகொள்படையொடும்பொருதல்வேண்டியே
யொன்றினையமின்றுண்மையுண்மையே. (அக)

மாதெனவுளங்கொளேலவனைமன்னநீ
யோதருமகாருஞ்சாருமுட்கமுன்
மோதுறுதிரைக்கடன்முகட்டெழுந்தவப்
பாதகநஞ்சமேபடிவங்கொண்டதால். (அஉ).

உம்மெனவளுராப்பொலிகொல்கின்றதீ
வெம்மைகொணமனையும்வீட்டுமாயுதங்
கைம்மலைபரித்தவைக்கண்ணற்கோர்தலைச்
சும்மைகொள்சுமையவளெடுத்தருலமே. (அ௩)

வேறு.

இனையனவொழ்மர்கூறுமெல்லையிற்கடைநாட்பொங்கிக், கனைகடலுடைந்ததென்னக்காளிதன்றுணையார்க்கு,நனிபொலிசெவிப்புலத்துநடந்தது,தாருகன்றன், சினவெரிக்கிழுதுமன்றிச்சமிதையுஞ்சொரிந்ததேபோல். (அ௪)

ஆயதுகாலைதன்னிலழலினெண்மடங்குசீறிச்,சேயிழைமகளிர்ப்பற்றிச்சிறைபுரிந்திடுவன்றாதீர்,போயெனதனிகழுற்றும் பொருக்கெனத் தருதிரென்ன, வேயினனவருநன்றென்றிறைஞ்சுபு விரைந்துசென்றார். (அ௫)

சென்றபினவுணர்செம்மல்செருத்தொழிற்கோலங்கொள்வான், கன்றியங்கெழுந்துட்போகிக்கதிரிளம்பரிதிமேலக், குன்றின்வந்தெழுந்ததென்னக்குருமணிமகுடமொன்று, தன்றலைகவித்தான்யாருஞ்சயசயவென்றெடுத்துவாழ்த்த. (அ௬)

கல்லெனமிழற்றும்வீரக்கழலடித்தலத்திலார்த்தான், மல்லலங்கச்சுவீக்கிமருங்கினிற்சுரிகைசேர்த்தான், புல்லுறுமங்கிமேனிப்புறந்தெரியாதுபோர்த்தான், வில்லுமிழ்சரம்பெய்தூணிவெரினிடைத்தூக்கினால். (அஎ)

அங்கையிற்கோதைசேர்த்தானணிவிரம்புட்டிலிட்டான், கொங்கலர்தும்பைமாலைகுருமணிமவுலிசூழ்ந்தான், புங்கவப்படையனந்தம்பூசனைபுரிந்தெடுத்தான், செங்கையிற்றொழுதுமேருச்சிலைநிகர்சிலையுங்கொண்டான். (அஅ)

இம்முறையமரின்கோலமெய்தியொள்ளிலைவேன்மன்னன், கொம்மெனத்தனதுகோயிற்புறத்தினிற்குறுகுமுன்னர், தெம்முனைமுருக்குஞ்சேனைதரமுனஞ்சென்றதூதர், தம்மனந்தனில்விரைந்துதலைத்தலைபரவிச்சென்றார். (அகூ)

சென்றவரொட்டகத்திற்செழுமுரசெறிந்துதுங்கட், இன்றொருபெரும்போர்வந்துகிடைத்ததிங்கெழுகசேனை, யென்றலுமவுணர்வேழமிரதமம்புரவியென்னத், துன்றுறுமனிகவெள்ளந்தொகையிலவெழுந்தமாதோ. (கூ0)

போரெனச்செங்கெறக்கூட்டுப்பெயரினைப்புகலுற்றூது, மேருவுதடந்தோள்வீங்கியெங்ஙனென்றெழுந்துதுள்ளும், வீரர்களவுணர்கூகர்வெஞ்சமர்க்

கெழுமினென்ன, வாருறுபணை முழக்கமகிழ்ச்சிகொள்வதையென்சொல்வாம். (கூக)

வீங்கினர்புயங்கணெஞ்சம் விம்மினராமரிற்றுன்ப, நீங்கினரெழுவும்வாளுநேமியுமழுவும்வில்லுந், தாங்கினர்பகைஞரெங்ஙன் சார்ந்தனர்காட்டுமென்ன, வோங்குறுமண்டகூடமுடைந்தெனவார்த்துச்சூழ்ந்தார். (கூஉ)

இந்திரன்வயிரந்தன்னூற்சிறகர்முன்னீரப்பட்ட, வந்தமில்கிரிகளெல்லாமனையவன்பகைஞரென, நந்துறுமவுணன்றன்பானட்புறநடந்தவென்னச், சுந்தரத்திகிரிப்பொற்றேர் திசைதொறுஞ்சூழ்ந்தவம்மா. (கூங)

சோர்ந்துறுகம்பின்மாதர்துணிவுறுமுள்ளஞ்சோருப்ச், சேர்ந்திடுகொழுநரேவற்றிருந்துமச்செய்யுமாபோ, லூர்ந்திடுபாகர்தம்பாலுளத்திடைமுனிவுகொண்டு, கூர்ந்தவர்குறித்தல்செய்யுங்கொடுமதமாக்கள்சூழ்ந்த. (கூச)

நிலத்திடைப்பாயுஞ்சென்றுநெடுவிசும்பகட்டிற்பாயும், மிலத்திடைப்பாயும்பாழிப்பெருங்கடன்முகட்டிற்பாயு, முலத்திடைப்பாயுஞானவொருநெறியோர்குறுமற், புலத்திடைப்பாயும்புல்லர்மனமெனப்புரவியீட்டம். (கூரு)

ஈண்டியவனிகநான்குமெழுந்தனவவுணர்கோமான், காண்டலுமுவகைபூத்துக்கவனவாம்புரவி

கோடி, பூண்டுறுமிரதமொன்றிற்பொருக்கெனவா விப்புக்குத், தூண்டுறுவலவற்பார்*ராவினையனசொல் வதானான். (௯௬)

பாகனீநொடிப்பின்மாதின்படையெதிர்நமது பொற்றேர், ஏகுறவிடுத்தியென்னவிறைஞ்சியின் றையவென்று, மாகவாம்பரிகடம்மைமத்திகைத் தொழிலாலுந்திச், சேகுலாமுருளைத்திண்டேர்ச்செ லுத்தினன்விரைந்துசெல்ல. (௯௭)

அடைப்பைகோடிகங்களாஞ்சியாலவட்டங்க ளொள்வா, ளெடுப்பவர்பலருஞ்சூழவிழிக்குறிகாட் டவந்து, படைப்புறமொய்க்குமீக்களகற்றுறும்பரி சுபோலப், புடைப்பரிசனங்கணின்றுபொலியும்வெ ண்கவரிவீச. (௯௮)

தாருகமன்னனேகுந்தன்மைகண்டனிகவெள் ளம், வாரிதியேழுமுட்கவல்லிதினார்த்தெழுந்து, தி ருமனந்தனுமப்பணியிறைசென்னிமாற்றப், பாரக ம்போழ்பட்டேங்கப்படர்ந்தன திசைகண்முற்றும்.

படிமகளசரீசப்பரிசனஞ்செய்தபால, முடி வுறக்கடவுட்கங்கைசூழ்குவான் படர்தலென்னக், கொடியவெம்படைகளார்த்துக் கொம்மெனநடக்கு மெல்லைப், பொடிவிசும்படங்கநுங்கிமீமிசைப்போ யிற்றம்மா. (௧௦௦)

விண்ணெழும்பூழிமாலைவெண்குடையடைந்த ப்பாற்போய்க், கண்ணகன்கதிரின்மேனிக்கவினழி

யாதவண்ண, நண்ணுபுதடுத்தவாழிநஞ்சுதானருந்
திமுக்கட், பண்ணவனமரர்க்காத்தபேரருட்பான்
மையேபோல். (௧௦௧)

நீங்கியநாணுப்பெற்றுநிறையழிகணிகைமாதர்,
தாங்களோருழியிற்கூடித்தத்தமின்மலைதலேபோற்,
பூங்குழன்மிழற்றச்செல்லும் பொருநர்கைப்பற்றவி
ண்ணி, ஞெங்கியேகொடிகளொன்றோடொன்றுதா
க்குற்றவன்றே. (௧௦௨)

தழங்கினமுரசமார்த்தகண்ணுமைகலித்தமொ
ந்தை, முழங்கினபடகமெல்லாமொய்ம்பினினியவர்
தாக்குஞ், செழுங்காவிசைகட்கேற்பச்சிலம்பினபு
வனிமாந்த, ரழுங்குரலோசையேற்றுமடுக்கியன்
றெழுதலேபோல். (௧௦௩)

இவ்வகையனிகமென்னுமிருங்கடல்விரைந்து
சூழத், தெவ்வடுருவவுத்திண்டோட்டிருகுளத்தவு
ணர்கோமான், கொவ்வையங்கனிவாய்ச்செங்கட்கு
மரிதன்படைவந்தெய்து, மவ்வழியெதிர்சென்றே
ற்றனமார்கணடுங்கியேங்க. (௧௦௪)

மண்டுறுமவுணவெள்ளமலிந்தெதிர்வந்ததன்
மை, கண்டனர்வடவையேபோற்கனன்றியோகினி
கள்குலங், திண்டிறலோடுசெங்கைவிரல்களாற்றிரி
த்துமிக்க, வண்டகோளகைவெடிப்பவார்த்தெதிர்
சென்றுபுக்கார். (௧௦௫)

வேறு.

எழுக்களுமுசலமுமிலைகொள்வேல்களு
மழுக்களும்வளைகளும்வாளும்வாளியுங்
கழுக்களுமலைகளுங்கதையுங்காளிகள்
குழுக்களுமவுணர்மேற்கொதித்துவீசினார். (க0சு)

தோமரமொளிறுவாள்சுரிகைமுத்தலை
நேமிகள்சிலையுமிழ்நெடுஞ்சிலீமுக
நாமவேன்முதலினநஞ்சிற்றீயவர்
தாமும்போகினிகண்மேற்றருக்கிவீசினார். (க0எ)

கரங்களின்முசலமுங்கதையுநல்கியே
புரங்கிளர்சொரிமதவொருத்தலுந்தினார்
மருங்குறவொளிறுகைவாள்விதிர்த்துவன்
றுரங்கராசிகடமைத்தூண்டியீண்டினார். (க0அ)

தார்கெழுதடம்புயத்தருவராழியந்
தேர்களைமுடுக்கியெண்டிசையுஞ்சூழ்ந்துகொண்
டேர்கிளர்கொடுமரமிமைப்பின்வாங்கிவின்
கார்களின்மும்மைவெங்கணைகள்சிந்தினார். (க0கூ)

விழுந்தனதலையுடல்வேறுவேறதா
யழுந்திடவளைகளினூற்றிற்செம்புன
லெழுந்தனவிருதிறத்தினுமெண்ணில்லவ
ருழுந்துருள்பொழுதினிலுலந்துபோயினார். (கக0)

கண்டனரவுணர்தங்களிப்புமாற்றலு
மொண்டழலெனவுளமுருத்துப்பொங்கினா

ரண்டமுமிடிபடவதிர்த்துவல்லையின்
மண்டியோகினிகடாமலைதன்மேயினர். (௧௧௧)

பரியொடுபரிகளும்பனைக்கைமும்மதக்
கரியொடுகரிகளுங்கதிருலாமணி
யிரதமொடிரதமுமெடுத்துவீசினர்
சுரருளமகிழ்வொடுதுணங்கையாடவே. (௧௧௨)

சிறந்திடுநெடுமணித்திகிரித்தேர்களை
யுறைந்தவரொடுமெடுத்தும்பர்வீசினர்
மறந்தருபெருவலிமாருதம்பறித்
தெறிந்திடுமேருவின்முடிகளென்னவே. (௧௧௩)

கொய்யுளைமாவும்வெண்கோட்டுவேழமு
மொய்யெனவேயெடுத்துகைக்கின்றோருடன்
மையலில்சூராடகளிர்வீசினர்
வெய்யவன்றேரொடுவிலங்கவிண்ணின்மேல்.(௧௧௪

அருகுறுமவுணரையடர்ந்துபற்றியே
கருகுறுமிடற்றினைக்கடித்துக்கொக்கிடைத்
திருகுறுகனியெனச்சுவைத்துச்செம்புனல்
பருகினர்முனிவொடுபசியாற்றினர். (௧௧௫)

பிடித்தனர்குருதிநீர்பிலிற்றுக்கைகளா
லடித்தனரவுணர்தம்மாக்கையென்பெலா
மொடித்தனர்கதிரையுதிரத்தண்டினு
விடித்தனருயிரைவிண்ணேற்றினாரரோ. (௧௧௬)

வேறு.

வெருட்டினருதைத்தனர்மிதித்தனர்துகைத்
தார், மருட்டினரிடித்தனர்வளைத்தனர்செறுத்தார்,
புரட்டினரெடுத்தனர்புடைத்தனர்கறுத்தா, ருருட்
டினர்தயித்தியருயிர்க்கிடரிழைத்தார். (ககஎ)

அடுத்தவசுரக்குழுவெடுத்ததிருவங்கா, ரிடத்
தினகத்தினுநிலத்தினுமெழிந்தார், நொடித்திடுவ
ராப்பிறுன்றுக்கினாரனந்தம், படைத்தலைவரை
ப்பதைபதைத்திடவதைந்தே. (கக௮)

இத்திறமியோகினிகளெங்கணுநெருங்கிக், கொ
த்தசுரவெள்ளமயுதங்கடிதுகொன்று, ரத்திறமனை
த்துமொராடம்புயவமைச்சன், னெய்த்தழலெனக்க
னனுநெஞ்சமொடுகண்டான். (கககூ)

கண்டவனிலங்கிரதமங்கெதிர்கடாவி, விண்டு
மகமேருவும்வெடித்திடவதிர்த்து, வண்டுபொழிகி
ன்றதனிவார்சிலைவளைத்துக்,கொண்டொருகணத்தி
னிலடைந்தடல்குறித்தான். (க௨0)

குறித்தவனதிர்ப்பொடுபெய்கொண்டல்கணிகர்
ப்பப், பிறைத்தலைநெடுஞ்சரமதிர்ப்பினொடுபெய்து,
மறைத்தனனிருந்திசைகள்வஞ்சனிகள்சென்னி, ம
றுத்தனனுருட்டினனலக்கணுறவிண்ணோர். (க௨க)

கரத்திணையறுத்தனகழற்றுணையறுத்த, புரத்தி
ணையறுத்தனபுயத்திணையறுத்த, சிரத்திணையறுத்தன

செருக்கினையறுத்த,வரத்தினையறுத்தனவமைச்சன்
விடுவாளி. (௧௨௨)

வேறு.

மண்டுமாரமுற்கடவுளைவந்தலைக்கின்ற, சண்டமாருதமெனப்புகுந்தமைச்சர்கடலைவன், வண்டுமாமறைமொழிந்தியோகினிகளைமலையக், கண்டுதானையந்தலைவியுங்கொருத்தியுட்கனன்றாள். (௧௨௩)

அந்தயோகினியசனியேறுக்கிடவதிர்த்தே,யிந்தநீசனதுயிர்குடித்திடுவனென்றிமைப்பின், வந்துகூடியக்கடுந்திறலமைச்சனைவானத், துந்துமாழியந்தேரொடுமுடனெடுத்தெறிந்தாள். (௧௨௪)

வீரயோகினியவனதுவீரக்குமகிழ்ந்து, யேருலாவுறுதுறக்கமேலேவினளென்னத், தேரொடேயெடுத்தெறிந்திடத்தினகரன்றிருத்தே, ருரும்வானெறிகடந்துபோயொல்லையின்மீண்டான். (௧௨௫)

மீண்டுவீழ்பவன்மேலொருபெருங்கதைவிரைந்து,தூண்டினளதிர்த்தவனதுவுணர்ந்துதுண்ணெனவேவார், நீண்டவாளெடுத்ததிர்த்திரதத்தினுநீங்கித், தாண்டிவானிடைத்துணித்துவண்டதைதனிற்குதித்தான். (௧௨௬)

இரதம்வீழ்ந்துதுண்டுகளதாயிற்றதவ்வேலை, நிருதன்வான்கதை துணித்துமண்குதித்தவணிற்பக், குருதிகால்விழிச்சூர்மகள்கண்டுளங்கொதித்து

ப், பரிதிபோலொளிர்கின்றவெம்பரிதியொன்றுய்த்
தாள். (கஉஎ)

உய்த்தவாழியம்மாயவன்னேமிபோலுருத்து,
மெத்துதியுமிழ்ந்துறுசெயல்கண்டுவில்வளைத்துப்,ப
த்துநூறெனும்பகழிகடொந்ததுதுணித்துத், தத்து
வார்திரைக்கடலெனவார்த்தனன்றருக்கால்.(கஉஅ)

திகிரிமாய்வுறக்கனன்றன * டிகிரியொன்றெழியிற்
பகருமாதிபப்பெயர்த்திணையொல்லையிற்பறித்து
நிகரில்வீரன்மேலெறிந்தனனஃதவனீக்கா
னகலவாருவிலேற்றனனூர்த்தெதிர்புகுந்து.(கஉகூ)

அந்தவெற்பவனடற்புயந்தாக்கிமீண்டதிர்ந்து,
வந்துபட்டவண்மூலைத்தடத்திற்றதுவறிதே, மூந்
துமற்றவர்புயமூலைக்குடைந்திடுமுனிவா, லுந்தவு
ற்றவையொடும்பொருதிறந்தவாறெப்ப. (கங0)

வெய்யவொண்கிரியிற்றலும்விரைந்துவில்வண
க்கி,யையிரண்டுவெம்பகழிகளவனுதலமூத்திக்,கை
யில்வன்கதையொன் றெடுத்திமைப்பினிற்கலந்து,
† மொய்யிலங்கவன் முடியிசைமோதினண் முடிந்
தான். (கஙக)

முன்னர்மெய்யொடும்விசும்பிடையேற்றிறுண்
மூனிந்து, பின்னர்மந்திரக்கிழமையோன்றனையுட

* கிகிரி என்னும் மூன்றெழுத்துள் ஆதியாகிய ஓரெழுத்
தொழியில் பகரப்படும்பெயர் கிரி அப்பெயரையுடையதுமலை.

† மொய் - பொருகளம்.

ல்பிரித்து, மன்னுமும்பரின்மீண்டிடாதேற்றிடமகிழ்ந்து, துன்னுபுங்கவர்குரவையாட்டயர்ந்தனர்துள்ளி. (௧௩௨)

ஆனகாலையினமைச்சனங்கிறந்தமையறிந்து, தானமாவிரவுணர்கள்சீறியச்சண்டி, சேனைநாயகி மீதுபல்படைக்கலஞ்சிதறி, மீனவேலைகண்முழக்கமுமழுங்கமிக்கார்த்தார். (௧௩௩)

அன்னதன்மைகண்டியோகினிகடிதினோடல்வாட், டன்னையங்கைகொண்டப்படையனைத்தையுந்தடிந்து, * பன்னலின்குவைபாற்றிடுஞ்சூறைமாருதம்போன், மன்னுவெந்தொழிலவுணருட்புகுந்தனண்மலைந்தாள். (௧௩௪)

தாடுணித்தனடலைகளைத்துணித்தனள்சயங்கூர், தோடுணித்தனள்கரங்களைத்துணித்தனள்சுட்டரும், வாடுணித்தனள்கொடுமரந்துணித்தனள்வயஞ்சொல், சூடுணித்தனளிமைப்பினிற்கறங்கெனச்சுழன்று. (௧௩௫)

சிலைகளற்றனவுடம்பிடியற்றனசெழுமூ
விலைகளற்றனநெடுங்கரமற்றனவெழிற்றேண்
மலைகளற்றனதுணைப்பதமற்றனவயவர்
தலைகளற்றனதருவியர்தாவியுமற்றார். (௧௩௬)

குன்றமெண்ணிலபோலவேகளேபரங்குவிந்த, துன்றுமோங்கலிற்றொடங்கியோடாறெனச்சோரி,

---

* பன்னல் - பருத்திப்பஞ்சு.

யொன்றிவீழ்பிணக்குவாலினுநின்றிழிந்தொலித்துச்,சென்றுவேலைபுக்கனகருங்கடற்பெயர்தீர(கஙஎ)

படர்ந்தகாகமுமெருவையும்வன்சிறைப்பருந்து, மடைந்தஞாளியுமிகலனுமளைக்குநரியும், குடைந்துமூளையுநிணங்களுந் தின்றுபேய்க்கூத்தாய்க், கிடந்ததெங்குமவ்வியலியோகினிபொருங்களமே. ( )

பிறங்கல்போலுயர்பிணக்குவையுண்டவெம்பேயின், றிறங்களோர்பெரும்பேயரசென்றுசெங்களத்து, நிறங்கொண்மாமுடிகவித்திடுங்கவிகைகணிழற்றுங்,கறங்குபம்பையுமியம்புறுங்கவரிகளிரட்டும். ( )

சொரிவாய்மடுத்துண்டுமென்னிணங்களைச்சுவைத்துப், பேரியாறியகளத்துளவதிர்த்துவெம்பேய்கண், மூரிவேலுடைக்காளிபெம்மிடிகளைமுடித்தாள், போரின்மேவியென்றவடனைப்புகழ்ந்துநின்றுடும். (கச௦)

நீங்குபோர்வையம்பணையினைநிறுவிவேணிருக, ரோங்குமூரல்களரிசியிற்பெய்துநீளுலக்கை,யாங்குவேழவெண்மருப்புமொண்முசலமுமாகத், தாங்கிமாவெனவிடித்தனதருக்குபெண்பேய்கள். (கசக)

மிக்கமென்றசையிருந்திடவெற்றெலும்பதனைத், தக்கதென்றுபுன்ஞமலிகள்கறித்தனதளர்ந்து,அக்கமொன்றுமிறம்மனைதுறந்துபோய்ப்பிறரில், புக்குவெந்துயர்க்கடற்படுமிழுதைகள்போல. (கசஉ)

இன்னதன்மையதாயசெங்களத்திடையெடுத்த, மின்னல்வாளிஞலியோகினியவுணரைவீசிச், சின்னபின்னமதாகவேதுணித்திடச்சிலர்தாம், வென்னளித்தனருயிரினைக்காப்பது விழைந்தார். (கசங)

அதனைத்தாருகமன்னவனவ்விடைக்கண்டான், கதுவிப்புக்குலைக்கடுங்கனலாமெனக்கதமும், நிதைமுக்கவ்விவன்பற்கறித்தெனதிருஞ்சேனை, சிதையக்கொல்பவர்மாதரோநன்றெனச்சிரித்தான். (கசச

சிரித்தீயவன்யோகினித்திரடனைச்செழுந்தீப், பருத்திவான்குவைப் புக்கெனப்படுப்பனென்றெண்ணிக்,கரத்திலோர்பெருங்கதைகொடுகலினமான்றேர்விட், டுருத்துமாவிலவரைப்பினிலொய்யெனப்பாய்ந்தான். (கசரு)

பாய்ந்தகாலையிற்பெரும்புவிவெடித்ததுபணிகளோய்ந்தமாதிரக்கடகளிறோடினவெருண்டு, சாய்ந்தமேருமால்வரைமுதலாயினசயில, மேய்ந்தவானவரொன்கொலோமுடிவதென்றினைந்தார். (கசசா)

தேரினின்றருப்புற்றவன்செயற்றனைத்தெரிந்து, போரில்வென்றிகொள்யோகினிகாற்றெனப்புகுந்து, தாரின்மல்கியவசுரர்கோன்றடம்புயமீது, மூரிநல்வசியோச்சினளுருமெனமுழக்கி. (கச௭)

தரியலார்புகழ்விறலினோன்றடம்புயந்தர்க்கு, மரியவாள்சிறிதேனுமூற்றிடாததிலே, பெரியரோ

டிகலறிவறுபேதையர்போல, முரியவாங்கதுகண்ட
னன்றுருகமுதல்வன். (௧௪௮)

கண்டதியவனவளுரத்தெடுத்ததோர்காத்துத்,
தண்டினும்புடைத்தானலன்றனதிடக்காத்தா,லண்
டகூடமேயுடைந்ததென்றயிர்த்திடவடித்தான், வி
ண்டுமார்பகங்குருதிவாய்சொரிந்திடவீழ்ந்தாள். ()

தலைவீழ்தலும்யோகினித்தானைகளனைத்துஞ்,
சுலவிவேன்மழுத்தண்டுவாள்சூலமாதிகளாம், பல
வுமோவறத்தாருகப்பதகன்மேற்றூர்த்தார், நிலவு
மாரழன்மீதெறிதுரும்புகணிகர்ப்ப. (௧௫௦)

வேறு.

ஒடிந்தனசிற்சிலவுடைந்தசிற்சில
பொடிந்தனசிற்சிலபோழ்ந்தசிற்சில
மடிந்தனசிற்சிலமறிந்துவந்துமண்
படிந்தனசிற்சிலபடைக்கலங்களே. (௧௫௧)

வீடினபடைகளிவ்விதத்திலாயிடைக்
கூடியவவுணர்கோன்கொதித்துமாதரு
ளோடினரொழியவிங்குற்றுளோர்தமைச்
சாடுவலெனவெதிர்தலைப்பட்டானரோ. (௧௫௨)

அடிகளுங்கரங்களுமறுவைகளும்தரு
* கடிகளும்புயங்களுங்காளிமாதர்தம்

---

* கடி - நிதம்பம்.

முடிகளுஞ்சிதறிடமோதினன்கருங்
கொடிகளுங்களிப்புறக்கொடியன்றண்டினால். ௧௫௩

ஆயிரநீலிகளடியொன்றுலகன்
மாயிருஞாலமேன்மறிந்துவீழ்ந்திடப்
போயருங்கதையினாற்புடைத்துவீட்டினான்
றீயுருமேறெனத்தெழிக்குமார்ப்பினான். (௧௫௪)

சிலவரைக்கதையினாற்சிரங்கள்போக்கினான், சிலவரைக்கரத்தினாற்செருக்குநீக்கினான், சிலவரைப் புயத்தினாற்றிகைப்பதாக்கினான், சிலவரைப்பதத்தினாற்சினத்துத்தாக்கினான். (௧௫௫)

உதைத்தனன்சிலவரையுதிரச்சேற்றிடைப், புதைத்தனன்சிலவரைப்பொறிகலங்கிடச், சிதைத்தனன்சிலவரைத்திருகிச்சென்னிகள், வதைத்தனன்சிலவரைமடங்கல்போன்றுளான். (௧௫௬)

பற்றினன்சிலவரைப்படுக்கும்வானிடைச்
சுற்றினன்சிலவரைத்தொலைக்குங்கால்களாற்
செற்றினன்சிலவரைச்செறுக்குமார்பிடைக்
குற்றினன்சிலவரைக்குமைக்குந்தாருகன். (௧௫௭)

பாரினில்வரையினிற்பாதலத்தினிற்
காரினிலுவரியிற்கடத்தின்மாலய
னூரினின்மகபதியுழியிலாதபன்
றேரினிலுலகினிற்சிலரைவீசினான். (௧௫௮)

முரிந்தனவென்புகண்முரிந்தபன்னிரை
முரிந்தனபாணிகண்முரிந்தவான்றொடை
முரிந்தனதாளிணைமுரிந்ததோட்டிணை
முரிந்தனகந்தரமுரிந்தநாசியே. (கருகூ)

ஓடினகுருதியாறெங்கும்வெம்பென
நீடினகளேபரநிறைந்தஞாளிகள்
பாடினகழுதுகள்பறந்தலைக்கணின்
றாடினகவந்தமோராயுதமென்பவே. (கசு0)

மொழிந்திடுபுகழினோன்முருக்கவெல்வகை
யொழிந்திடும்யோகினிமகளிரோடினார்
வழிந்திடுபுனல்விழிவதனத்தெற்றியே
யழிந்திடுமுணர்வொடுமமரர்தேம்பினார். (கசுக)

கண்டனன்யோகினிக்கணங்கள்சிந்திய
தொண்டிறலவுணர்கோனுருள்பொற்றேரின்மேற்
றண்டொடுமொய்யெனத்தாவினான்சின
மண்டுறுபெருவலிமடங்கலென்னவே. (கசுஉ)

தானவப்படையெலாந்தருக்கிச்சிந்துபு
போனவப்படைகளைத்தொடர்ந்துபோக்கியே
மானவப்படைபுலான்மழுக்கள்வாண்முத
லானவப்படையெலாமார்த்துவீசினார். (கசுந)

எஞ்சலிறன்படையிரிதல்காளிகண்
டஞ்சலிரஞ்சலிரவுணரியாரையும்

புஞ்சமென்சிறுபுழுப்போலவிவ்விடைச்
செஞ்சிலம்படியினாற்றேய்ப்பனென்றனள். (கசுச)

என்றவள்வலவியைநோக்கியிம்மெனத்
துன்றுறுமவுணர்தஞ்சூழண்முன்னரோ
சென்றுறநமதுதேர்ச்செலுத்துவாயென்று
ணன்றெனவவடொழாநடத்தினளரோ. (கசுரு)

கடங்கவிழ்கவுணெடுங்களிறுவவ்வுறு
மடங்கலின்மிசைவருஞ்சிம்புண்மானவே
விடங்கதுவுறுமொழிவிமலைதேரொடு
மடங்கலொதிர்புகுந்தடுதன்மேயினாள். (கசுசு)

முதிர்ந்திடுசினமொடுமூரிவில்லெடுத், தெதிர்
ந்திடுமவுணர்முன்பெய்திமேதினி, யதிர்ந்திடமேரு
வுமலையவானமீ, துதிர்ந்திடவுகிரிஞாணொலிக்கொ
ண்டாளரோ. (கசுஎ)

வெருண்டனர்சிற்சிலர்வீழ்ந்துமண்ணின்மேற்
புரண்டனர்சிற்சிலர்செவிகள்பொத்தியே
மருண்டனர்சிற்சிலர்மணிப்பொற்றேரொடு
முருண்டனர்சிற்சிலருலவுந்தானவர். (கசுஅ)

நாணொலிசெவிப்புகநடுங்குந்தானவர்
நாணுமிழ்சுடுசரநணுகுமுன்னரோ
நாணுளமுழுவதுநழுவினோடுவா
ரூணொருசிறிதுறாநலியமின்றனர். (கசுகூ)

நின்றழுமனலுமிழ்நெடியவாளிகள்
குன்றெனும்வரிசிலைகுனித்துச்செண்டுபோற்
பின்றலிலவுணர்மெய்விடாதுபெய்தனள்
சென்றுறுகுருதியாறு[illegible]ச்செல்லவே. (களo)

ஆழிமான்றேரினுமயங்கண்மீதினுஞ்
சூழிமால்கரியினுஞ்சுடுசாங்கடா
மூழிமாமுகில்களுமுடையச்சிந்தியே
பாழிமாநிலமிசைப்படுத்தினளரோ. (களக)

உரங்களையறுத்தனவுடலறுத்தன
வரங்களையறுத்தனவயினறுத்தன
சிரங்களையறுத்தனசிலையறுத்தன
கரங்களையறுத்தனகாளிவாளியே. (களஉ)

அறுத்தனகரிகளையறுத்ததேர்களை
யறுத்தனபரிகளையவுணர்கோன்புக
ழறுத்தனபுரையவேயறுத்தவெண்குடை
யறுத்தனகொடிகளையாசுகங்களே. (களங)

சுரங்களிலோடினசுறவுமோதுசா
கரங்களிலோடினகடவுளோர்கடம்
புரங்களிலோடினபுழைக்கைதங்குமா
திரங்களிலோடினசிலீமுகங்களே (களச)

அறைதருகழலொடுமடிகளோர்திசை
கறைகெழுபடையொடுங்கரங்களோர்திசை

சிறையளிமலரொடுஞ்சிரங்களோர்திசை
பிறைமுகநெடுங்கணைபிடுங்கிவீசுமால். (கஎரு)

கூற்றுறழ்தனதுகைச்சாபங்கொண்டவர், சாற்றிடுபமுதில்வாய்ச்சாபமெண்ணில, மாற்றினனெனநொடிவரையிற்றாருகன், போற்றுறுபடைகளொன்றில்லபோக்கினான். (கஎசு)

வரிசிலையீர்த்தனவாள்களீர்த்தன
வெரிவிழியவுணர்மெய்யீர்த்ததேரொடும்
பரிகளையீர்த்தனபணைகளீர்த்தன
கரிகளையீர்த்தனகறைவெள்ளங்களே. (கஎஎ)

காளிவாளிகள்விடுங்காலைவீரமில்
கோளராமவுணர்கள்குலைந்தநெஞ்சராய்த்
தோளுலாம்படைகளைத்துறந்திங்கன்னை நீ
யாளுவாயெமையெனவறைகின்றார்சிலர். (கஎஅ)

குடையறக்காம்பினைக்குமரிவன்கதைப், படையெனத்தெறுமெனப்படிவிட்டார்சில, ரடுகளத்திழுகுடையதனையீட்டியிக், கடைகொளுவதுமெனக்கைக்கொண்டார்சிலர். (கஎகூ)

பூங்கதிர்வாளினைப்போக்கிவாம்பரி
நீங்கியங்கதுபிடீஇநிற்கின்றார்சில
ராங்குறுபுரவிவாயடுத்தபுல்லினை
வாங்குபுதமதுவாய்வைக்கின்றார்சிலர். (கஅ0)

வாங்கியதனுவினுண்பூட்டும்வாளியுந்
தாங்கியகரமொடுந்தரைப்பட்டார்சில
ரோங்கியவயவரொன்றுணரவீக்கிய
வேங்குறுகழலறுத்தெறிகின்றார்சிலர். (௧௮௧)

அழிந்தவர்தன்மையுமழிவுறாதபி
ரொழிந்தவரிவ்வகையுபங்குந்தன்மையுங்
கழிந்திடுபுகழினோன்கண்டுநாட்கடை
யெழுந்திடுகனலினுஞ்சீற்றமெய்தினான். (௧௮௨)

எய்தியவவுணர்கோனிரதமிம்மென
மொய்திகழ்குமரிமுன்முடுகவந்தன
னெய்தெனமடங்கன்முன்னேன்மையோடிகல்
செய்தொருகளிறெதிர்செய்கைபோலவே. (௧௮௩)

வந்தவள்பயங்கரவடிவங்கண்டனன்
சிந்தையின்வியந்திவடெரிவைபாயினு
மெந்தமதமரினுக்சேற்றுளாளென
நந்திடுமதிவினனவிறன்மேயினான். (௧௮௪)

வேறு.

மாறுபோரைவென்றிமதகரியினையுமஞ்ச, மோ
துமாண்புலியைவெல்வான்முன்னிமானடைந்ததெ
ன்னப், போதனுதியளைவென்றவென்றெடுபொரா
வேந்த, தேதுகாரணமுனைத்தியென்றனனறமிலா
தான். (௧௮௫)

அன்னசொற்குமரிகேளாவசனியேறென்னநக்
கு, நன்னரிற்பகைவனனைவயுறமசுரகேண்மோ,

துன்னுமக்கடவுளர்க்குத் துயரநீயிழைத்தலாலே,
யென்னைநிற்கொல்வான்முக்க ணெம்பிரானிவண்வி
டுத்தான். (௧௮௬)

ஆதலான்மதவேழத்தையட்டுணப்பிணுமடங்
கல், போதுமாறென்னநின்னைப்புகுந்தொருகணத்
தினுங்கி, யோதும்வானவர்கடுன்போடுடற்றுமென்
பசியுநீங்கும், காதலாலிவண்வந்துற்றேன்காளிநா
னெனவுரைத்தாள். (௧௮௭)

உரைத்தலுமவுணர்கோமானொருகையோடொ
ருகைதாக்கிச்,சிரித்தெமைநுகர்வனென்றுதெரிவை
நீயுரைத்தமாற்றங், கரத்தினில்விசும்புபற்றிக்கவ்வு
வனென்பதொக்கும்,தரித்தமிவ்வளவுமுன்னைத்தை
யலென்றடாமலென்றான். (௧௮௮)

என்றலுமிறைவிகேளாவிழிதொழிலவுணவென்
னை, வென்றியின்மடந்தையென்னவிளம்பினையுலக
மெல்லா, மொன்றொருகணத்தின்மாற்றியொடுக்கு
வதெமையாள்வெள்ளிக், குன்றிறைசத்தியன்றோ
குறித்திலைபோலுமென்றாள். (௧௮௯)

என்றவளுரைத்தல்கொள்ளானிழுதையாதலினு
ற்சீறித், தன்றனிவரிவில்லொன்றுதாங்கிநாணொலிக்
கொண்டார்த்தான், மின்றிகழ்முகிலுடைந்துவீழ்ந்
தனபணிபுரண்ட, குன்றமுமிலனுமண்டகூடமும்
வெடித்தவம்மா. (௧௯௦)

தார்மலிவயிரத்தோளான் மனுவிருணெறியக் கண்டு, வார்முலையிறைவிதானுமம்பினைவழங்குமுன்னங், கார்முகமதிர்ப்பதென்னக் கார்முகமதனை வாங்கிக், கூர்முகவம்புவீசநாணொலிக்கொண்டுநின்றாள். (க௯க)

அம்மைவெஞ்சிலைநாணோசையவுணருணொலி விழுங்கி, இம்மெனவெழுந்ததம்மையாமனையவனைநுங்க, வெம்மைகொண்டிருந்தாளென்றாலவளதுவில்லினார்ப்புக், கொம்மையங்குவட்டுத்தோளான்குணவொலிவிழுங்கிடாதோ. (க௯௨)

பின்னரங்கவுணன்றானோர்பெருங்கணைசிலையிற்பூட்டித், தன்னடிவிரன்முன்பின்றேர்தாங்குறச்சாணுவாங்கி, முன்னுரமுறவளைந்துநின்றமொய்குதைநாண்கையைக், கன்னமதளவுமீர்த்துக்காளிமேற்செல்லவெய்தான். (க௯௩)

விரைந்தடலிறைவிபூட்டிவில்லினோர்பகழிதூண்டிப், பொருந்துமதனைமாற்றிப்பொருக்கெனப் பின்னுநூறு, சரந்தெறவெதிர்விடுத்தாடாருகன்கண்டுமாறாத், தெரிந்திடுங்கணைகணூறுசெலுத்தியங்கவையறுத்தான். (க௯௪)

அறுத்தனுமிறைவிசீறியாயிரஞ்சுடுசரங்க, டெறித்தவன்கலினமான்றேர்ச்சிந்தினள்பாகனோடுங், கறுத்துமற்றொருதேர்வாவிக் கணைகளோர்பத்துநூறு, குறித்திடவந்துவாளிகுமரிமேலுற்றவன்றே. ()

வாளிகட்டாக்கிநொய்தினழிந்திடவலவிநின்ற,காளியங்கதனைக்காணூக்கணைகளீரேழுசிந்தி, மூளூறுசினத்துவெய்யோன்பற்றுகார்முகந்துணித்தா, னாளியேறனையான்மற்றோரடற்சிலையெடுத்துக்கொண்டான். (ககூசு)

அச்சிலைகுனித்துவாளியைம்பதுசிதறிச்சூலி,கைச்சிலைதுணித்துமுப்பான் கணையெதிர்புகவிடுத்தா, னச்சிலைபகழியெல்லாநாந்தகமொன்றுணூறி, முச்சகம்புகழுமம்மைமூரிவில்லொன்றெடுத்தாள் (ககூஎ)

எடுத்தவெஞ்சிலைகுனித்தங்கீருமீர்ம்பகழிநொய்தின், விடுத்தனளவுணன்மார்பின்விசிகமற்றவனுரத்தி, னடுத்தனவடுத்தலோடுமன்னதுவிலக்கிமற்றுங், தொடுத்திருசரங்களன்னோன்சுடர்முடிதள்ளியார்த்தாள். (ககூஅ)

பொறையறுந்தவமுமாட்சிப்பொருளறுங்கவியுமான்ற, மறையறுமுணர்வுஞ்செய்யமகவறும்வாழ்வுநீதி, யிறையறுமுலகுமன்போடியைபறுமறமும்போல, முறையறுமவுணர்கோமான்முடியிழந்தழகொழிந்தான். (ககூகூ)

சேகரங்குமரிதள்ளத்தியவனுணுட்கொண்டான், மாகரங்கெழுந்துள்ளிமலர்க்கரமெறிந்துநக்கார், சாகரங்கிளர்நஞ்சன்னதாருகன்கொதித்துச்செங்கை, ழாகரங்கடுக்குமற்றோரணிமுடிமுடிகவித்தான். (உ00)

பின்னாவ்வசுரன்மேருப்பிறங்கனோர்சிலைவளை
த்துத், துன்னுதுசோனைமாரிதோற்றிடப்பகழிதூர்
த்தா, னந்நிலையமரரெல்லாமஞ்சினரிரியல்போனார்,
மன்னிருசுடருமீனு மறைந்தனவிருண்டவெங்கும்.

நதித்திரையென்னமேன்மேனஞ்சிறுங்கொடி
யன்சாப, முதித்தலைப்பகழியீட்டமுயிழ்ந்திடவொ
யில்பரித்தேர்க், கதிர்த்தினமணிமண்டபப்பாக்கழியிரு
ள்புகனுங்கண்டம், புதித்திரையினர்கடாமம்புகத்
தொடுமருட்சிகொண்டார். (உ0உ)

பொற்றடமனைகுவிந்தபொலிந்தனகுவளைபுட்
க, டெற்றுறுகுடம்பைபுக்கசெய்தவர்திகைத்தாரின்
று, கற்றையஞ்சடிலத்தெந்தைதகண்களையிமையமின்று,
பொற்றொடிக்காத்தெம்மன்னை புதைத்தனள்கொல்
லோவென்று. (உ0௩)

அதுதனையிறைவிகாணுவசனியேறுட்கநக்குங்,
கதுமெனநெற்றிநாட்டக் கனலினும்பகழிமுற்றுஞ்,
சிதைவுறவடலைசெய்தாள் செழுமழைச்சிரத்தினூடு
ம், புதுமதியிலைந்தவண்ணல்புரம்பொடிபடுத்ததே
போல். (உ0௪)

கூர்ங்கணைப்படலைமாயக்குலவு * மூழ்விளங்கிற்
றொல்லை, யீர்ங்கதிர்புனைந்தவண்ணலருளினுலிரிய
மூட, நீங்கருமதிவிருந்தாதிகழ்வுறுந்தன்மைபோல,
வாங்கதுவிழியிற்கண்டானறமென்பதறிகிலாதான்.

---

* ஊழ் - பழைமை.

அன்னதுகண்டவெப்பனுயிரப்பத்துவாளி, தன்னிகர்குமரியெண்டோடாக்குறவிடுத்தான்றுக்கப், பன்னுனிவிசிகநீறுபட்டனபடலுமூழி, வன்னியிற்கனன்றுகோடி வாளியங்கவன்மேற்றூர்த்தாள்.

அத்துணைப்பகழிதூண்டியவனவையறுத்துவீழ்த்தா, னித்திறமிருவர்தாமுமொருவர்மீதொருவரோவும், வைத்தலைப்பகழிமாற்றிமகிழ்ச்சியுந்துயருங்கொண்டு, மொய்த்துறுமமரர்நோக்கமுதிர்சமர்த்தொழில்புரிந்தார். (௨௦௭)

வானகத்தோடுமேருவரைமுதலாகின்ற, மானகத்தோடுந்துங்கமகரவேலைகளினோடுங், கானகத்தோடுமண்டகடாகத்தினோடுமானம், போனகத்தோடுமன்னோர்பொழிந்திடுசுடுசரங்கள். (௨௦௮)

மாதிரத்தேகுநேமிவரையகத்தேகுமான்ற, பாதலத்தேகுமுற்றும்பாழியங்கடலினேகு, மீதலத்தேகுமண்டமுகட்டினிலேகுமீண்டும், பூதலத்தேகுமன்னோர்போர்செயத்திரங்களன்றே. (௨௦௯)

இவ்வகையமர்செய்கின்றவேலையிவ்வரிவைதன்னை, வெவ்வியகடவுளோர்தம்படைகளால்வெல்வனென்னத், தெவ்வடுகுவவுத்தோளான்சிந்தனைசெய்துகூர்ந்த, பவ்வமன்னவன்றனதுபடையெதிர்செல்லவுய்த்தான். (௨௧௦)

பொங்குவாரிதிகளாலும்புறப்பெருங்கடலுமொ
ன்று, மிங்குவந்தெழுந்ததென்னவிருநிலம்விசும்பு
மெல்லா, மங்கிவன்றிரைபொதிந்துநோன்மைகொ
ண்டார்த்துநண்ண, வங்கியின்படைசெலுத்தியழி
த்தனளதனைச்சூலி. (உகக)

மற்றது தெரிந்துதீயன்வன்னிமாப்படைவிடுத்
தான், சுற்றுமுழுதிலிரிந்துசூலழிந்திறப்பவாழி,மற்
றுறவமரர்நைந்துமருண்டிடவெழுந்துபொங்கி,யுற்
றிடவதனைக்காளியொலிப்படைதந்தழித்தாள். ( )

தீப்படையழிதலோடுஞ்சினமலியவுணன்வா
யு, மாப்படைவிடுத்தானெல்லாவரைகளுஞ்சுழல
விண்ணின், காப்பனைமுறியவீசிக்கலித்தெழுமதனை
நாகப், பூப்படைசெலுத்திமாற்றிப்புரிபுமுட்க
வார்த்தாள். (உகங)

கொடியவனதுகண்டுள்ளந்தழலெனக்கொதித்
தானாகப், படையினைவிடுத்தானன்றபஃறலைப்படம்
விரித்துங், கடுவினைவாய்கடோறுங்கான்றதுவருத
லோடு, மிடலுறுகலுழவென்றிப்படையினைவிடுத்
தொழித்தாள். (உகச)

கண்டனனதுமற்றேவக்கலுழவெம்படைதன்பா
ங்கர்,மண்டியசிறகர்க்காற்றுனிலுதிநாண்மருத்துமு
ட்கக், கொண்டலுமிரியவோங்குகுன்றுகள்பொடி
ப்பவங்கி, யொண்டிறலழியவாயினாகமோடடைந்
ததன்றே. (உகரு)

அந்தவான்படையினாற்றலம்மைகண்டாற்கொப்பாய, நந்திவான்படையெடுத்துநறுமலராதிகொண்டு, சிந்தையால்வழிபட்டேத்தித்திகழ்படைக்கிறைநீயன்றோ, னுந்துமாண்படையின்வன்மையொழித்தருளெனவிடுத்தான். (உகசு)

வேறு.

விடுக்கவதுவிடையுருக்கொண்டிமிலண்டமுகடுரிஞ்சவியன்ஞாலத்தை, யடிக்குரமொன்றெற்றுறக்கட்டழுறார்ப்பவாயினீரதனைக்காட்டத், தொடைக்கிளர்கிண்கிணிக்களத்திற்றடவர வந்தாமருத்துச்சுடுதிபண்ட, மடுக்குமணிப்புழைநாசிவிழிகாட்டவுலகமெலாமயர்ந்துவீழ. (உகஎ)

வாலடியான்மேருகிரிமுதலாயவரைபெயர்ந்துமறிந்துவீழ, மேலடன்மாமருப்பெறியவுரியதிலாமையினிலங்கிமிசையிருப்ப, மாலொடுவானவர்கரங்களுச்சிகுவித்திறைஞ்சிநனிவாழ்த்தவெங்கள், பானுடையானெமையாளும்பதமுடையான்றிருநந்திப்படைபோயிற்றால். (உகஅ)

நந்தியடும்படைகண்டவுடன்கலுழப்படைநடுங்கிநஞ்சுகாலுந், தந்தமணிபாவுதனைக்கண்டெனவழிந்ததுபின்மலைவருகு, மெந்தையிறைவிடையவுணன்மேற்செல்லவவனுமதையெதிர்விடுத்தான், வந்தனைசெய்தவைதம்மிற் பொருதுவிடுத்தவரகத்துமறிந்துபுக்க. (உககூ)

இந்திரன்மாமலரயன்மாலெனுமிவர்கள்படை
கடமையெடுத்துப்பின்னே,குந்தினனங்கவுணனைவ
யவருருக்கொண்டதிர்ந்துநனியுருத்தெழுந்து, வந்
திடனுமவர்படைகடாறு மெதிர்செலவிடுத்துமாற்
றிநின்முன், கொந்தவிழுமலரிதழிச்சடாமகுடத்தி
றைவிடுத்தகுமரிமாதோ. (௨௨௦)

வேறு.

இங்கினியிவனையெல்லாவுலகமுமிமைப்பின்மா
ற்றுஞ், சங்கரன்படைவிடுத்துச்சாடுதுமென்னத்தி
யோர், னங்கதைவிரைந்தெடுத்தேயருச்சனைமனத்தி
யற்றி, மங்கைதன்னுயிர்குடித்துவருதியென்றிறை
ஞ்சியுய்த்தான். (௨௨௧)

ஊழியங்கனலியோர்சாருருமொடுமுகில்களோ
ர்சா, ராழியங்கடல்களோர்சாருலகடுமாலமோர்சா
ர், சூழியங்கரிகளோர்சார்சுடுசரத்தொகுதியோர்சா
ர், பாழியம்புயத்துவென்றிப்பாரிடக்குழுக்களோர்
சார். (௨௨௨)

கடவுளர்படைகளோர்சார்காரிருட்படலையோ
ர்சார்,படவரவினங்களோர்சார்பாய்புலியரியாளோ
ர்சா, குடனுறுபவனமோர்சாருடனுருத்திரர்களோ
ர்சார், மிடனுறுவடுகரோர்சாருக்கிரவீரரோர்சார்.

கான்றுவல்விரைந்துமுக்கட்கடவுடன்படைமு
ன்வந்து, தோன்றலுங்குமரிகண்டுதனுக்கெனத்
தானுமங்ஙன், மூன்றெனும்புரமுருக்குமுதல்வன்.

வெம்படையைப்பூசை, யான்றதன்மனத்தினாற்றிய
தற்கெதிர்செல்லவுய்த்தாள். (உஉச)

உய்த்திடவனைய தவ்வாறுருவுகள்பலவுமாகி,யத்
தலையவுணன்றாண்டு மடற்படையுடன்சென்றேற்
று, மெத்தமர்புரிந்ததம்மாவேலைகடணந்தவண்ட,
பித்திகைபிளந்ததம்பொற்பிறங்கலும்வெடித்தவன்
றே. (உஉரு)

இருவர்தம்படையுமிவ்வாறேற்றமர்புரிந்துமீ
ண்டு, மருவினவவர்பால்வெய்யன்மனமகிழ்ந்தவட்
ன்மீதி, லுரவியகதையொன்றெல்லையோச்சினனத
னைப்பார்தட், பொருவுறுசரமீரைந்துபோக்கினடு
ணித்துவீழ்த்தாள். (உஉசு)

பின்னைம்பதிற்றிரட்டிப்பிறைமுகக்கணைகடு
வி, மன்னவன்றடந்தேர்ச்சாரப்பமற்றொருதிகிரித்
திண்டேர், தன்னிலொண்பணையினாறுதாவும்வான
ரம்பொழ்பாய்ந்தா, னன்னதுமறித்தும்வீழ்த்தாள
டற்கணையாறுபோக்கி. (உஉஎ)

மற்றதுதெரிந்துதீயன்மறுகுறுமனத்தனாகிப்,
பற்றலர்புகழுங்காளிதேரினிற்பாய்ந்திமைப்பி,னிற்
றதுபுவிகொலோங்கு மிமயங்கொலென்னக்கையா,
லெற்றியங்கவடன்மார்பி னிருநிலந்தனிற்குப்புற்றா
ன். (உஉஅ)

கண்டனளதனைக்காளிகடையுகக்கனலிற்சீற்ற
ங், கொண்டினியிவனையின்னேகொல்வனென்றனர்

தற்காண, மண்டலம்வெடிப்பமன்னர்மன்னவனுடன்குப்புற்று, விண்டிடவாத்தெறிந்தாண்முத்தலை வேலொன்றம்மா. (௨௨௯)

எறிந்திடவயர்ந்துநின்றான்மனச்சினவெரிபோந்தன்ன, நிறந்தருகுருதியோங்கிநிலத்திழிந்தோடிற்றீசன், மறந்தருமவுணன்சோரிமண்புகாதேற்றருந்தென், றறைந்தருண்மொழியயர்த்தாளடுத்தவெஞ்சினத்தாற்காளி. (௨௩௦)

மன்னவன்குருதிதோய்ந்தமண்ணினுண்டுகளைத்து, மன்னவன்வடிவமாயவவுணராயபாலகால, மென்னவெங்கொடியராகியிரும்படைக்கலங்களோடுந், துன்னுறுமுகிலுமஞ்சவார்த்தனர்தோன்றினாரால். (௨௩௧)

தோன்றியவவுணத்தீயோர்தொகுத்தொருபதினான்கென்ன, வான்றிடுமுலகனைத்துநிறைந்தனரனையோர்க்கண்டு, கான்றிடுமுயிர்ப்படங்கிக்கைப்பொருள்சோர்ந்திறந்தோர், போன்றனர்புலனிழந்துபுலவரென்றுரைக்கப்பட்டோர். (௨௩௨)

சூலமுமழுவும்வாளுஞ்சுரிகையுமெழுவும்பிண்டி, பாலமுஞ்சரமும்வீசித்தாருகன்படிவங்கொண்டோர், ஞாலமுமனலுமன்னவடற்பெருங்காளிதன்னைத், தாலமும்விழுங்குமாவஞ்சனிப்படையொடும் வளைந்தார். (௨௩௩)

மிண்டியவசுரர்தங்கடோற்றமுஞ்சமர்க்குமிக்
கு, மண்டுறுசெயலுங்கண்டுமாதொருபாகன்சொல்
லுட், கொண்டுதன்படையனைத்துங்கூவியவ்வசுரர்
தம்மை, யுண்டிடுமென்றுதாமுமவர்தமையுண்பதா
னாள். (உ௱௪)

முத்தலையதனலன்னோர்மொய்ம்பினிற்குத்திநெ
ய்த்தோர், கைத்தலத்திருந்தபாழிக்கபாலத்தினேற்
றருந்தி, மைத்தடவரைகளன்னவளரியாக்கைகளு
முண்டா, *னுத்தாரந்தனிலுமோங்குமுதரவெங்கியி
னுண்மிக்காள் (உ௱௫)

விரிந்திடுவயிறொண்குண்டமாயிடைமேவுமங்
கி, யெரிந்திடுமுதவகன்றானெனவசுரர்கடஞ்சோரி,
சொரிந்தவருடனிணங்கடூர்த்தொருவீரயாகம், புரிந்
தனளுலகமெல்லாம்புகழ்தருங்குமரியன்றே. உ௱௬

மூர்த்தமொன்றதனிலாண்டுமொய்த்தயோகி
னிகளோடு, மார்த்துவந்தெதிர்த்தியவவுணரையெ
ல்லாமுண்டாள், ஓர்த்தியங்குமரிபின்னர்த்தாருக
ன்றெளிந்துசீறிப், பார்த்தனன்றனியாய்நெஞ்சம்ப
தைத்தவட்புடைப்பவந்தான். (உ௱௭)

வந்திடவிலைவெஞ்சூலமார்பினின்மீண்டுமோ
ச்சிச், சிந்திடுகுருதியங்கைச்செழுங்கபாலத்தேற்று
ண்ணு, விந்தமண்மகடன்பாரமிறக்கினளென்னவங்

---

* உத்தாரம் - ஊழித்தீ.

யன், வெந்தொழிலவுணன்மாளயாக்கையும்விழுங்
கினளால். (௨௱௮)

மற்றதுகண்டுவிண்ணோர்வலியதாருகனையன்னை,
செற்றனளுங்கியிங்ஙன்றேவொன்றளைக்குநம்மை
ப், பெற்றனளின்றென்றார்வப்பெருங்கடற்படிந்து
நெஞ்சு, முற்றவெந்துயரகன்றுபாடினாரோடினா
ரால். (௨௱௯)

வேலையூடெழுந்தநஞ்சம்விமலனுண்டளித்த
செய்கை, போலநீயம்மாவின்றுபொருவிறாருகனை
யுண்டு, பாலராமெமையளித்தாயென்றனர்பழிச்சி
வானோர், சூலிமீதிடைவிடாமற்சொரிந்தனர்பூவின்
மாரி. (௨௱௰)

ஆயிடையுளமகிழ்ந்தேயவுணர்கண்மலைப்பமா
ய்ந்து, போயினவனிகமுற்றும்பொருக்கெனவுயிர்
பெற்றுய்ய, நாயகிகுமரியின்றுநவின்றனணவின்ற
காலை, மேயினதுயிலொழிந்துவிழித்தெனவெழுந்
தருந்தார். (௨௱௰௧)

வேறு.

அன்னதுகாலையிலவுணர்சோரியுந்
துன்னியவுடல்களுந்துய்த்ததன்மையான்
மன்னியகுமரிதன்மதிமயங்கியே
தன்னிகரிலையெனத்தருக்கினளரோ. (௨௱௰௨)

தருக்கியவுளத்தினோடாங்கிநல்லியாழ்
திருக்காவிரிசினற்றெறித்துப்பாடியே

முருக்கியபுயங்களுமுடியுந்தாள்களுங்
கரக்குவைகளுஞ்செறிகளத்திருடினள். (௨௪௩)

நடித்திடவவளதுநாடிப்பெண்கடாம்
வெடித்திடிலமுடுவீழவாவிக
டுடித்திடவிமயமுந்துளங்கக்கைகளை
யடித்தனரதிர்த்தனராடன்மேயினர். (௨௪௪)

கொட்டுபுகரங்களைக்குலாலநேமிபோல்
வட்டணைவிரலினில்வருகின்றார்சிலர்
கிட்டியவலகைகள்கீதம்பாடியே
நட்டமதிடவுடனடிக்கின்றார்சிலர். (௨௪௫)

தண்ணுமைதனையடிச்சதிக்கிசைந்தொலி, நண்ணுறமுழக்குபுநடிக்கின்றார்சில, ரண்ணலந்தயித்தியராக்கைக்குன்றின்மேற், றண்ணெனவிவர்ந்தனர் துவைக்கின்றார்சிலர். (௨௪௬)

மாகமீதெறியுமம்மனைகள்பற்பல
வாகவீழ்தலையெடுத்தாடுவார்சிலர்
வாகுவால்விலாவுறத்தாக்கிமெய்வளைத்
தோகையானடநவின்றுழல்வரோர்சிலர். (௨௪௭)

மெலிவுறுமடிகள்வாய்விழிபுருரமங்
குலிவிகாரப்படக்குளிக்கின்றார்சிலர்
வலியவெண்கவடிகணிரைத்துவைத்தபோ
னலியெயிறிலகுறநகைக்கின்றார்சிலர். (௨௪௮)

முத்தலைவேலினான்முடைப்பிணங்களைக்
குத்துபுதாங்கியேகுனிக்கின்றார்சிலர்
மத்தகவெனக்குடர்மாலைதோளிடா
வத்திகளெனவதிர்த்தாடுவார்சிலர். (௨௪௯)

இனையனபலவிதத்தெண்ணில்பேயினி
வனிதையர்குருதிநீர்வாய்மடுத்திடு
ஙனிவருகளிப்பினான்மத்தநாகமே
யனையவெங்குமரியோடாடினாரோ. (௨௫௦)

ஆடுமாவருமவர்முழக்கமுங்
கூடுமங்கைகள்கொட்டுமோசையு
நீடுமுலகெலாநீங்கவங்கெழா
மூடுமுமிழ்க்கணமுழக்கையென்மதே. (௨௫௧)

போழ்ந்தனபுலியெலாம்பொடித்தவெற்பெலாம்
வீழ்ந்தனமுகிலெலாமெலிந்துமூர்ச்சையி
னாழ்ந்தனவுயிரெலாமலைந்தவான்சுடர்
சூழ்ந்தனவுலகெலாந்துயரவேலையே. (௨௫௨)

துப்புறுகுமரிகடொகுதியாடுமச், செப்பரும்பு
கழுடைச்சேடன்பாரினை, யப்பரம்பொறுக்கிலாதா
யிரங்கமுங், கொப்புளங்கொளவுளங்குலைந்துதாங்
கினான். (௨௫௩)

மாதவனயன்மகத்தரசன்வானவர்
மூதறிவுடையமாமுனிவர்யாவரும்

பேதுறவந்திளம்பிறைமுடித்தவெம்
மாதியோடபயமென்றறைதன்மேயினார். (௨௫௪)

எந்தையேதாருகனிழைத்தவெந்துயர்
வந்தமாகாளியெங்கட்குமாற்றியே
யந்தவான்றுயரினுமதிகமாக்கினாண்
முந்துகான்முட்பறீஇமுளையடித்தல்போல். (௨௫௫)

தாருகனால்வருந்துயரந்தன்னைநின்
பேரருளாலொருபெண்ணினீக்கினை
யாருறுசெருக்கினாலவள்செய்துன்பமு
நீருறுசடையினாய்நீக்கியாட்கொணீ. (௨௫௬)

நஞ்சினையருந்தியுங்கனலையேந்தியு
மஞ்சிடம்தகரியட்டுமேழையே
முஞ்சிடவருளியவொருவகாளிதன்
விஞ்சியசெருக்கையும்வீட்டியாளுவாய். (௨௫௭)

என்றிவரனைவருமியம்பிக்கைதொழா, நின்றிட வெங்கணுநிறைந்தவெம்பிரான், வென்றியங்குமரி தன்மிகுஞ்செருக்கினை, யொன்றொரு * சாழலாலொ ழிக்கவுன்னினான். (௨௫௮)

வேறு.

உன்னுநாயகனுலகெலாமீன்றவளோடுந், து ன்னுவான்கணஞ்சூழ்தரச்சூரமகளி, ரன்னையாடி

* சாழல் - ஓர்விளையாட்டு.

டம்வடவனமாகவாயிடையின், மன்னுபேரருட்ட
ன்மையாலிமைப்பினில்வந்தான். (௨௫௯)

வந்துகாளிமுன்பேருருக்கொண்டுமாமறையு,
மந்தநாரணக்கடவுளுமறிவருங்கரிய, கொந்துலாம
லர்த்திருவடிசிவந்திடக்குனித்தான், தந்தையாகியெ
வ்வுயிரையுமளித்தருடலைவன். (௨௬௦)

கோதுக்காகரமாகியேசெருக்குறுங்குமரி, மா
துக்கோர்புறமளித்தவன்செயல்கண்டுவணங்கி, யே
துக்காடுகின்றாய்வழிதென்றெனுடனீண்டு, வாதுக்கா
டுதிவருதியென்றுரைத்தனண்மயங்கி. (௨௬௧)

என்றவாசகங்கேட்டலுமடியவர்க்கெளிய, னன்
றுகாளிநீதருக்கதாண்டவஞ்செயநவின்றாய், வென்
றிதோல்விகண்டுரைத்திடச்சான்றுநம்விமலை, நின்
றுதாண்டவம்புரிதியென்றுடினனிமலன். (௨௬௨)

கற்றைவேணியிற்செருகியகதிரிளம்பிறையை
ச், சுற்றிவால்கொடுகட்செவிநான்றிடச்சுருகிப், பற்
றதாகியபதமலர்ச்சிலம்பொலிபரப்பப், பொற்றமா
நகநாயகன்றிருநடம்புரிந்தான். (௨௬௩)

படியும்வானமுநடுங்கிடப்பாரவைகளடங்கக்,
கொடியயோகினிக்குழுவெலாம்பாணிகள்கொட்டி,
நடநவின்றிடமயன்மிகுயாமளைநடித்தா, ளடியர்வே
ண்டியவேண்டியாங்களிப்பவனுடனால். (௨௬௪)

இருந்துதென்றிருவாலங்காட்டருந்தவஞ்செய்
யா, விருந்த * முஞ்சிகனொடுகார்க்கோடகனென்ன
ப்,பாந்தசீர்த்திமாநாகமுஞ்செஞ்சடைப்பகவன்,பு
ரிந்தநாடகங்கண்டருங்கதியிடைப்புகுந்த.(௨௬௫)

வேதனாரணன்விண்ணவர்முனிவரர்விமலன்,
போதநாடகங்காண்டலுமெய்ம்மயிர் பொடிப்ப,
வோதும்வாசகந்தளர்ந்துளநெக்குநெக்குருகிக், கா
தலாலரகரவெனக்கூப்பினர்கரங்கள். (௨௬௬)

அண்டர்நாயகன்றிருநடம்புரிவயினடுத்துப்,
பண்டைநான்மறையுருவுகொண்டன்பொடுபாடக்,
கண்டுநான்முகன்றாளமொத்தினனதுகாலை,மண்டு
மாபுகழருணந்திமத்தளமதிர்த்தான். (௨௬௭)

எங்கணாயகனுலகெலாமாடல்கண்டிருக்கு, மங்
கைநாயகனடனமிவ்வாறுசெய்தருள, வங்குவாது

---

* சுனந்தமுனிவரென்பவர், கைலாயத்திலே தாண்டவ தரிசனந் தந்தருளப் பிரார்த்தித்து, சிவபெருமான் அனுக்கிரகப்படியே திருவாலங்காட்டையடைந்து, நெடுங்காலம் அருந்தவம் புரிந்திருந்துழி, மண்மேடிட்டுத் திருமேனிமறைந்து கேசத்தோடு முஞ்சிப்புல் முளைக்கப்பெற்றமையால், முஞ்சிகேச முனிவரென்னும் திருநாமமுடையரா யிருக்க; கார்க்கோடகர் என்பவரும், கைலாயத்திலே சிவபெருமானுக்குக் கங்கணமாயிருக்குங்கால், அறியாமையால் விடத்தைக்கக்கி, அக்குற்றங் காரணமாக அக்கடவுளருளியவாறு அத்தலத்தை யடைந்து, தவநிலையினின்று தாண்டவதரிசனம் கிடைக்கப்பெற்று, அம்முனிவரோடு முத்தியடைந்தனர்.

செய்துடன்சுழன்றுடுவாளெய்த்தாள், பொங்குமா
னமுற்றிடுதலாற்பிணுநடம்புரிந்தாள். (௨௬௮)

வேறு.

நொந்துளாடனைநோக்குபுவாதினன்
வந்தநாடகமாற்றவருள்கொளா
வந்தவேலையினண்டமுகடுற
வெந்தைதாளொன்றெடுத்தனனென்பவே. (௨௬௯)

தொண்டராகுலந்தீர்க்குந்தொழிலினே
னண்டகூடமளவுமெடுத்ததா
ளுண்டதாலமுமிழ்நெடுமான்முனங்
கொண்டபேருருக்கொள்கைநிகர்க்குமால். (௨௭0)

வேறு.

மண்ணிடையொருதாளூன்றிமற்றொருகமலப்பொற்றாள், விண்ணிடையெடுத்துமேலோனடிப்பதுவீரிகண்டு, தண்ணெனநாணுட்கொண்டுசுடுங்கனற்பட்டமென்று, வண்ணமதெனப்புலர்ந்துவதனம்வன்றலைகுனித்தாள். (௨௭௧)

நாணினான்முகங்கவிழ்ந்துநண்ணியசெருக்குநீங்கி, யேனுலாங்குமரிநிற்பவெண்ணில்யோகினிகளெல்லாங், கானுறுநடமொழிந்துசூழ்ந்திரங்கழலநிற்கு, மானுலாம்பாவைபோலவறிதுநின்றனர்களன்றே. (௨௭௨)

ஆங்கதுகண்டுவிண்ணோருவகைபூத்தமலன்மீது, தூங்குமழையின்மும்மைசொரிந்தனர்பூவி

ன்மாரி, பாங்கரின்வந்துவீழ்ந்துபணிந்தனரெழுந்துதுள்ளி, வாங்குதெண்டிரைக்கடற்கெண்மடங்கொலியெழத்துதித்தார். (உஎங)

ஆயகாலையினிற்காளியஞ்சியாரணங்கடாமு,மாயனுமயருங்காணுநின்றனைமதித்திடாமற், பேயனேன்செய்தபிழைபொறுத்தருள்பெருமவென்று, தூயமாஞானநந்தசோதியைத்தொழுதுநின்றாள். உஎச

நின்றவடன்னைநோக்கிநீயுளம்வெருவலென்றே, தன்றிருவருள்புரிந்துசண்டதாண்டவமிதம்ம, வுன்றனக்கிதனைநோக்க லரிதெனவுரைத்துத்தன்று, ளொன்றலைபொறித்தமுக்க ணெம்பிரானியம்புகின்றான். (உஎரு)

வேறு.

திகழ்வுறுமிந்தவடவனந்தனக்குத்தென்றிசையாகவோர்நகரம், புகழ்வுறுங்கூவபுரமெனவுளதப்புரிகயிலையங்கிரிதன்னி, னிகழ்வுறுபெருமைபெற்றதுநமைப்போனிகரிலாவதனிடையென்று, மகிழ்வொடுமுலகமனைத்தையும்புரப்பான்மதித்திரக்காநடம்புரிதும். (உஎசு)

அப்பெருங்கூவபுரத்திடையேயருள்புரிநந்திருநடனஞ், செப்பருங்காதலாற்றினங்கண்டுதிகழுமந்நகருளாரெல்லா, மொப்பருமதுநந்தியங்கணத்தினுள்ளவரொன்றுமேகருதி, வெப்பதுமுதலாம்பிணிமிடிபேய்கள்விலங்கினன்வருந்துயர்களைவாய் (உஎஎ)

என்றிவையிசைத்துநம்மொடுதருக்கமியம்பிநீ நடாவின்றதனு, லுன்றனக்கொருபேர்தருக்கமாதா வென்றோங்குநவினையதுமன்றித், தென்றிருக்கூவநகர்தனைக்காத்துச்செறிந்திடுபீடைகளரிப்ப, வென்றிகொள்பெயர் * பீடாரியென்றுலகின் விளங்குகவென்றனன்விமலன். (௨௭௮)

அன்னசொற்குமரிகேட்டுளமகிழ்வுற்றன்பினுன்மும்முறைவணங்கி, நின்னருளதனலடியனேன்றீமைதீர்த்தெனையாண்டவாரமுதே, பன்னருங்கூவபுரத்திடைச்சென்றுன்பவுரிகண்டந்நகர்காப்பே, னென்னவங்கியம்பி விமலனைவிடைகொண் டெய்தினள் கூவமாநகரின். (௨௭௯)

எய்தியகுமரிகூவமாநகரையிறைஞ்சியாலயத்தினுட்போகிச், செய்தவமுடையோர்விழியினிலொளிர்ந்தெரியும்விற்கோலநாயகனைக், கைதொழுதகலாவன்பினுற்பணிந்து களிப்பொடும்போந்தடியவர்க்கு, மெய்தருமருள்சேர்வளர்சடைக்கூத்தன்விளங்கருநாடகங்கண்டாள். (௨௮௦)

கண்டனுமனவிற்படுமெழுகெனவேகரைந்துளமுருகிவாள்விழிநீர், கொண்டல்கண்மழைமேற்சொரிவதுகடுப்பக்குவிமுலைமீதுவீழ்ந்தொழுக, மண்டலமதனிலைந்துறுப்பணைய வணங்கியங்கெழுந்தனள்

* பீடாரி என்பது - உலகவழக்கில் பிடாரியென மருவிற்று.

போற்றி, விண்டிடவரியமெய்ப்பரானந்தவெள்ளத்
திற்றிளைத்தனளன்றே. (உஅக)

இத்திறமமலனருணடங்காணாவின்பமுற்றிடு
பெருஞ்சூலி, கைத்தலமமர்ந்தமழுவினோனாலங்கா
ட்டினிலருளியமுறைமையே, மெய்த்தவர்புகழுங்கூவ
மாபுரத்துவிருப்பொடுமிருந்தொருதுயரு, மத்திரு
நகரிற்குறுவகையென்று மன்னைபோற்காத்திருக்கி
ன்றாள். (உஅஉ)

வேறு.

இனையதிருக்கூவபுரப்பெருமையினையிவ்வளவெ
ன்றியம்பவல்லோ,ரனையநகர்தனையிடங்கொண்டரு
டிருவிற்கோலநாயகரேயல்லாற்,பினையொருவருரை
த்திடுதற்கெளியதுவோவியாதனெனப் பெயர்பெற்
றுள்ள,முனிவனருள்கொண்டுசிறிததன்பெருமைத
மியேனுமொழியப்பெற்றேன். (உஅங)

அண்ணலருந்தவமுனிவீர்முத்திதருசிவஞான
மளிக்கவல்ல, கண்ணுதலான்றலங்கடமிலனந்தகோ
டியினினொருதலத்தையுன்னித், துண்ணெனவிங்கு
ரைத்தியெனப் புகன்றனீராதலினாற் சூதர்கள்போற்
று, மெண்ணரியபுகழ்க்கூவமாநகரைக்குருவருளா
லியம்பினோனால். (உஅச)

இக்காதைதனையொருக்காற்புகன்றருளவினவி
னவரிசைகூர்வண்டு,புக்காருநளினமலர்ப்புங்கவனா
கூவ

குவரிருக்காம்புகலிற்கேட்பின், மைக்காரினிகர்நிறத்
தகமலவிழிப்புவியளந்தமாயனாவர், முக்காலவ்வகை
புரியினையோனுங்கயிலைமலைமுதல்வனாவார். ( )

பழுதிறிருக்கூவபுராணத்தினையோதிடுபவர்க்கு
ம்பயன்கேட்போர்க்குங், கழுதுபலவிலங்குநவக்கிர
காதியாலனையுங்கடியவின்னன், முழுதுமிலையவம
ராண்டுந்தீக்கனவுமிடிபிணிகண்முற்றுமின்று, மெழு
துபவர்வினையனைத்துநமன்கணக்கர்தமதேட்டி லெ
ழுதிடாரே. (உஅசு)

இக்கதையையன்பினொடுபடிப்பவர்களரும்பய
ன்கேட்டிடுவோர்மேன்மை, மக்கட்டைமயுயிர்த்திடு
வொன்றென்றுமொழியாதவாழ்வுசேர்வர், மிக்கபெ
ருஞ்சித்திகளோரிருநான்குமடைவர்மனம்விழைந்
தவெல்லா, மக்கணமேபெறுகுவரீரேழுலகுதனினு
மவர்க்கரியதின்றே. (உஅஎ)

இங்கிதிருச்சினகரமேதவர்மடமேயறந்திறம்பா
த்திகழுமில்லே, யோங்குமலைக்கடமேநன்னதிக்க
ரையேயெனுமிவற்றுளொன்றின்மிக்க; பூங்கடம
ண்டபமியற்றியதிலிருந்துதிருக்கூவப் புராணந்தன்
னைத், தேங்கமழுமலர்புனையொண்சுடர்கொடுபூச
னையியங்கள்சிலம்பச்செய்தே. (உஅஅ)

ஓதிடுவோதிடுநாட்டொடங்கிநால்வகையுண்டி
யோடுமன்ன, மாதவருக்கிடுமுடிவுறுநாளிற்படித்

தவர்கண்மலர்ப்பொற்றுளி, னூதாவுகொடுபரமசிவ னெனவேவந்தனைசெய்தறுவையோடுந், நீதிலணி விளைநிலம்பாற்பசுவிவைகளளித்திடுக சிறக்கப்பின் னர். (உஅகூ)

பொய்யின்மறைபுகழ்திருவிற்கோலநாயகர்ப்பு கழும்புராணமோடு,துய்யமனனுடன்படித்துப்பொ ருள்விரிக்கும்பெரியோனைத்தொழுதுபோற்றி, வை யமுதனூர்திகளி னிருத்திமிகுபல்லியம்வான் மழை யினார்ப்பச்,செய்யநகரலங்கரித்துவலம்வருவித்திட ல்வேண்டுந்திகழுமன்பால். (உகூ0)

இந்தவகைபுரிந்திடுவோர்பாவகோடிகளகற்றி யிம்பர்தன்னில், புந்திவிழைபொருளனைத்துமீந்து திருவிற்கோலப்புனிதமூர்த்தி,கந்தமலரயன்முதலா ங்கடவுளர்க்குமரியபரகதியுநண்ணத், தந்தருள்வ னெனவுரைத்தான் சூதமாமுனிவனெனுந்தவத்தர் கோமான். (உகூக)

சூதமுனியுரைத்தமொழிநைமிசமாவனத்து றையுந்தூயநெஞ்ச, மாதவர்களனைவருங்கேட்டுவ ந்தனையோன்றனைவழுத்திவந்துகூவப், போதநக ர்தனினரியவிற்கோலநாயகனைப்போற்றிமேவி, மூ தறிவுவந்தனன் மூலவிருளகன்றுபரமுத்திசேர்ந் தார். (ககூஉ)

வேறு.

தீதிலாவிறைசெங்கோல்வழங்குக
வேதவாகமமெய்ந்நெறியோங்குக
போதஞானியபுண்ணியர்மல்குக
ஓதுமூவர்தம்மொண்டமிழ்வாழ்கவே. (௨௧௫)

தாருகன்வதைச்சருக்கம் முற்றிற்று.

ஆகச்செய்யுள்-௭௦௫.

---

திருக்கூவப்புராணம் முற்றுப்பெற்றது.

திருச்சிற்றம்பலம்.

---

சிவப்பிரகாசசுவாமிகள் திருவடி வாழ்க.

